# காயத்ரீ

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை போஸ்ட், எலமனூர் ஸ்டேஷன்
திருச்சி ஜில்லா
1986

# காயத்ரீ

நம்முடைய தேசீய மந்த்ரமாக இருப்பது, தேசீய லக்ஷியமாக இருப்பது, மானுட வர்க்கத்துக்கே லக்ஷியமாக இருப்பது காயத்ரீ மந்த்ரம். வேதத்தினுடைய சாரம் காயத்ரீயில் அடங்கியிருக்கிறது. மானுட வாழ்க்கையின் லக்ஷியத்தை அது விளக்குகிறது.

காய்த்ரீ மந்த்ரம் பிரார்த்தனையாகவும், தியான சுலோகமாகவும் அமைந்திருக்கிறது. பரப்பிரம்மத்தின் அம்சங்களாகிய பல தெய்வங்களுக்குப் பல காயத்ரீ மந்த்ரங்கள் அமைந்திருக்கின்றன. அவைகளைத் தேவி காயத்ரீ, ருத்ர காயத்ரீ, விஷ்ணு காயத்ரீ, சுப்ரமண்ய காயத்ரீ, கணேச காயத்ரீ என்று பாகுபடுத்தலாம். இத்தனைவிதக் காயத்ரிகளுள் நாடு முழுதுக்கும் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பொதுவாக இருந்துவருகிற காயத்ரீ ஒன்றேயாம். அது பிரம்ம காயத்ரீ அல்லது சூரியகாயத்ரீ என்று அழைக்கப்படுகிறது. இனி, பரமஹம்ச காயத்ரீ என்பது ஒன்றுண்டு. அது துறவியர்களுக்கு உரியதாகும். துறவியர்கள் உட்பட வழிபாடு செய்கின்ற மக்கள் எல்லார்க்கும் பொதுவாக இருப்பது சூரியகாயத்ரீ.

ஒரு மந்த்ரத்தினுடைய அர்த்தம் தெரிந்திருந்தாலும் தெரியாவிட்டாலும் அதை உச்சரிக்கின்ற அளவு உச்சரிக்கின்றவர்களை அது பக்குவப்படுத்துகிறது. அந்த வல்லமை மந்த்ரசக்தி என்று சொல்லப்படுகிறது. மந்த்ரத்தின் ஓசைக்கு அலாதியான சக்தி இருக்கிறது. இறைவனுடைய குறிப்பிட்ட திருநாமம் மந்த்ரமாகிறது. ஓம் நம: சிவாய என்பது மந்த்ரம். ஓம் நமோ நாராயணாய என்பது மந்த்ரம். இவை சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் உரிய மந்த்ரங்களாம். பிரம்ம

காயத்ரீயை எந்தத் தெய்வத்திற்கு வேண்டுமானாலும் பயன் படுத்திக்கொள்ளலாம். தெய்வத்தைக் கருத்தில் எடுத்துக் கொள்ளாது தத்துவ உபாசனை பண்ணுகிறவர்களும் இதை மந்த்ரமாக வைத்துக் கொள்ளலாம். இது மனிதனைப் பார மார்த்திகத்தின் உயர்நிலைக்கு எடுத்துச் செல்ல வல்லது.

காயத்ரீ மந்த்ரத்தைக் குறித்து இடைக்காலத்தில் வந் துள்ள கொள்கை ஒன்று உண்டு. அதாவது இந்த மந்த்ரத் தைச் சூத்திரர்களும், பெண்பாலரும் உபயோகப்படுத்தக் கூடாது. இக்கொள்கையைத் தத்துவ பூர்வமாக வியாக்கி யானம் பண்ணுமிடத்துக் காயத்ரீ மந்த்ரத்தைச் சரியாக அறிந்து பிரயோஜனப்படுத்த முடியாதவர்கள் சூத்திரர் களாம். இதை அறிந்து உபயோகப்படுத்துகிறவர்கள் எல் லாரும் துவிஜர்கள் ஆகின்றனர். துவிஜன் என்றால் இரு பிறப்பாளன் என்றுபொருள். தாயின் வயிற்றினின்று பிறந்து வருவது ஒருபிறவி. தன்னுடைய வாழ்க்கையை மேலான வாழ்க்கையாகத் திருத்தியமைக்க ஆரம்பிக்கின்றபொழுது மனிதன் ஆத்மீகத்துறையில் இன்னொருபிறப்பு எடுத்தவன் ஆகின்றான். ஆகையினால் அவன் துவிஜன்—இருபிறப்பாளன் என்று சொல்லப்படுகிறான். அதற்குத் தூண்டுதலாக வந் தமைந்திருப்பதுதான் காயத்ரீ மந்த்ரம்.

பெண்பாலரைப் பற்றி இடைக் காலத்தில் வந்துள்ள இன்னொரு கொள்கை ஒன்றுண்டு. அவர்கள் காயத்ரீ மந்திரத் தைச் சொல்லக்கூடாது; வேதம் கற்கக்கூடாது. இதுவும் பொருளற்ற கொள்கையாம். சமுதாயம் சீர்கேடு அடைந்து வர ஆரம்பித்தபொழுது இக்கொள்கை உருவெடுத்தது. இப் பொழுது சமுதாயம் புதிய வலிவு பெற்று வருகிறது. இக் காலத்தில் அவதரித்துள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் சூத்திரர், பெண்பாலர் ஆகிய இருகூட்டத்தாரைப் பற்றிய

கொள்கைகளை மாற்றியமைத்திருக்கிறார். வேதம் கற்பதற்குப் பெண்பாலர் தகுதியற்றவர் என்பதை மாற்றிப் பரஞான குருவாகச் சாரதாதேவியாரை ஸ்ரீ ராமகிருஷ்ணர் அமைத்துள்ளார். பெரிய பெரிய துறவியர்களுக்கே ஞானகுரு ஸ்தானம் வகிக்கின்ற பெரிய நிலையில் ஸ்ரீ சாரதாதேவியாரை அவர் அமைத்து வைத்தார். அதன் மூலமாகப் பெண்பாலருடைய பாங்கைப் பழைய பெருநிலைக்குக் கொண்டு வருவதற்கு அவர் துவக்கம் செய்து வைத்தார்.

இடைக்காலத்தில் வந்துள்ள ஐதிகம் சூத்திரர்கள் சந்நியாசத்துக்குத் தகுதியற்றவர்கள் என்பதாம். அவர்கள் காயத்ரீ மந்த்ரத்தைச் சொல்லக்கூடாது என்பதாம். சந்நியாசத்துக்குத் தகுதி வாய்ந்தவர்கள் யார் என்பது கேள்வி. பரமஹம்சர் இக்கேள்விக்கும் விடை கொடுத்திருக்கிறார். அவருக்கு வாய்த்த சிஷ்ய கூட்டத்தை ஆராய்ந்து பார்க்க வேண்டும். அவருடைய சிஷ்யர்கள் அனைவரும் தலைத்தரமான சந்நியாசிகள் என்பது வெளிப்படை. துறவறத்தின் உச்சநிலையை அவர்கள் எட்டியுள்ளவர்களாவார்கள். மக்களுள் மாணிக்கங்கள் என்று அவர்களைப் பகரவேண்டும். பிறப்பையோ, குலம் கோத்திரத்தையோ பரமஹம்சர் கருத்தில் வாங்கிக்கொள்ளவில்லை. பண்பாடு ஒன்றையே அவர் முன்னணியில் வைத்தார். இடைக்காலத்தில் வந்த ஐதிகத்தைத் திருத்தியமைத்த பெருமை அவருடையதாம். கல்வியில்லாத ஒரு வேலைக்காரனை லாட்டு என்று அழைக்கப்பெற்ற இளைஞன் இருந்தான். குலத்தில் அவன் உயர்ந்தவன் அல்லன். எனினும் அவனிடத்து நல்ல சம்ஸ்காரங்கள் அமைந்திருந்ததைப் பரமஹம்சர் கவனித்தார். அவனுக்கு நல்ல பயிற்சியையும் அவர் கொடுத்தார். பிறகு தமது துறவியர் கூட்டத்தில் லாட்டு என்பார் எடுத்துக் கொள்ளப்பட்டார். அற்பு

தானந்த சுவாமி என்ற பெயர் அவருக்கு வருவதாயிற்று. அவர் வாழ்ந்த பெருவாழ்வு ராமகிருஷ்ணருடைய அற்புதங்களுள் ஒன்றாகும். ஏசுநாதர் ஒரு கோட்பாட்டைப் பகர்ந்தார். அதாவது The Lord shall have his chosen ones from stocks and stones—"கல், துரும்பு போன்ற ஜட நிலையில் இருப்பவர்களை எடுத்துப் பெரிய மூர்த்திகளாக உருவாக்குவது இறைவனுக்குச் சாத்தியம்." பரமஹம்சர் அப்படிப் பண்ணியிருக்கிறார். சந்நியாச ஆஸ்ரமத்திற்குத் தகுதியுடையவர்கள் யார் என்கின்ற கேள்விக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய செயல் சரியான விடையாக வந்தமைந்திருக்கிறது. மனபரிபாகத்தை அவர் கருத்தில் எடுத்தார். பிறப்பை அவர் புறக்கணித்துவிட்டார். எக்குடியில் பிறந்தவன் என்பதை முன்னிட்டு இடைக்காலத்தில் வந்தவர்கள் வருணத்தை நிர்ணயித்தார்கள்; எத்தகைய பாங்கு படைத்தவன் என்பதை முன்னிட்டுப் பரமஹம்சர் வருணத்தைப் பாகுபடுத்தினார். அவர் வகுத்து வைத்துள்ள முறை உலகம் முழுதுக்கும் பொருந்தக்கூடியதாக இருக்கிறது.

எந்த உயர்ந்த லக்ஷியத்தை இடைக்காலத்தில் நாடு கடைப்பிடிக்கவில்லையோ, கடைப்பிடிக்காததன் விளைவாக நாடு க்ஷீணதசைஅடைந்ததோ அந்த லக்ஷியத்தைத் தக்க காலம் வந்தபொழுது பரமஹம்சதேவர் ஓர் ஆசாரிய புருஷராக எழுந்தருளி ஸ்தாபிதம் பண்ணுகிறார். அவருடைய சிஷ்யக் கூட்டமே அப்புதிய அமைப்புக்கு விளக்கமாக வந்தமைந்திருக்கிறது.

இடைக்காலத்தில் பெண்பாலர் பின்னணியில் இருந்தனர். இப்பொழுது காலநிலை மாறியமைந்துவருகிறது. பெண்பாலர் அதிவேகம் கல்வியில் மேல்நிலைக்கு வந்துகொண்டிருக்கின்றனர். நாட்டையாள ஒரு பெண்பாலுக்கும் இயலும்

என்பது இன்றைக்கு நிரூபிக்கப்படுகிறது. கல்வி ஸ்தாபனங்களில் இன்றைக்குப் பெண்கள் கற்கின்ற பாங்கில் ஆண்கள் கற்பதில்லை. இன்னும் ஐம்பது வருஷங்களுக்குள் ஒருவேளை ஆண்பாலரைவிடப் பெண்பாலர் மேல்நிலைக்குப் போக முடியும். பெண்பாலர் துறவறத்திலும் ஈடுபடுகிறநிலை வந்துள்ளது.

இடைக்காலத்தில் நாம் க்ஷீணதசையடைந்ததற்குக் காரணத்தை விவேகானந்த சுவாமிகள் கன்னியாகுமரியில் பெற்ற ஞான அனுபவத்துக்குப் பிறகு எடுத்துரைத்தார்: "பாமரர்களையும், பெண்பாலரையும் பின்னணியில் வைத்த தன் விளைவாகவே நாடு க்ஷீணதசை அடைந்தது." அக்குறைநிலையை நிறைநிலையாக்குதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடிகோலினார். பாமரர்களையும் பெண்பாலரையும் பரம்பொருள் சொரூபமாகக் கருதி அவர் பாராட்டியது அவர் துவக்கிவைத்துள்ள புதிய இயக்கமாம். மனபரிபாகம் அடைந்திருப்பவர்களைப் பரமஹம்சர் நேர்பார்க்கின்றார். பரிபாகம் ஆனவர்களைத் தமக்குச் சொந்தமாக அவர் எடுத்துக்கொள்கிறார். சமுதாயத்தில் ஆங்காங்குள்ள நல்லாரைப் பொறுக்கியெடுத்து ஒரு பெரிய சான்றோர் கூட்டத்தை அவர் அமைக்கின்றார். அத்திருக்கூட்டம் உலகம் முழுதுக்கும் பொதுவானது. அவருடைய இயக்கம் உலகம் முழுதிலுமே பரவிவருகிறது. மானுடவர்க்கம் முழுதுக்கும் அது பொதுவானது.

இந்த இயக்கத்தை அடிப்படையில் வைத்துத் தத்துவத்தை நாம் ஆராய்ச்சி பண்ணவேண்டும். பல்லாயிரம் ஆண்டுகளாக நம் நாட்டில் தேசீயப் பிரார்த்தனையாகவும், தேசீய மந்த்ரமாகவும் இருந்துவருகிற காயத்ரீயைப் பொதுவுடைமையாக்கவேண்டும். மறுமலர்ச்சிக்கு அது இன்றி

யமையாதது. ஆத்மீகத்துறையில் நாடு மறுமலர்ச்சி பெற்று வருகிறது. அதற்குப் பொருத்தமான மந்த்ரமாக அமைந் திருப்பது காயத்ரீ. பால்வேற்றுமையின்றி, பிறப்புவேற் றுமையின்றி அதைப் பயன்படுத்தக்கூடியவர்களுக்கெல்லாம் அதை உரியதாக்க வேண்டும்.

யந்திரத்தைச் சரியாக இயக்குகின்றவர்கள் யந்திரிகள், இஞ்ஜினியர்கள், பொறியியல் வல்லுநர்—இப்படியெல்லாம் பகரப்பெறுகின்றனர். யந்திரத்தைச் சரியாக் இயக்கத் தெரியாதவர்கள் இஞ்ஜினியர் அல்லர். அதே விதத்தில் காயத்ரீ தத்துவத்தை அறிந்து பழக்கத்தில் கொண்டுவர முடியாதவர்கள் இன்னும் பரிபாகம் அடையாதவர்களாம். அன்னவர்களைச் சூத்திரர் எனலாம். மன அமைப்பிலும் வாழ்க்கை முறையிலும் அவர்கள் மேல்நிலைக்கு வந்தவர்கள் அல்லர். மக்கள் என்றும், மாக்கள் என்றும் சமுதாயத்தில் இருப்பவர்களை இரண்டாகப் பிரிக்கிறோம். மாக்கள் நிலை யில் இருப்பவர்கள் சூத்திரர்கள். சமுதாயத்தில் எப் பொழுதுமே சூத்திரர்கள் இருப்பார்கள். ஆனால் பிறப்பை அடிப்படையாகக்கொண்டு லக்ஷக்கணக்கான பேரைச் சூத்தி ரர் என்று ஒதுக்குவது ஒவ்வாது. அப்படிச் செய்வது பெரிய பிழையாகும். பெருவாழ்வுக்குத் தகுதி வாய்ந்தவர்கள் எங்கு, எந்நிலையில் இருந்தாலும் அவர்களை உயர்நிலைக்கு உயர்த்துவது தெய்வ வழிபாட்டுக்கு ஒப்பான செயற்கரிய செயலாகும்.

நாடு செய்துள்ள மற்றொரு பிழையின் விளைவை இன் றைக்குக் கண்கூடாகக் காண்கிறோம். பண்பட்ட மேல் நிலையில் இருக்கும் மனிதனொருவன் தன் பண்பாட்டைத் தகுதி வாய்ந்துள்ள மற்றவர்களைத் தேடியெடுத்து அவர் களுக்கு வழங்கவேண்டும். அப்படிச் செய்யாது மேன்மை

யானது தனது தனிப்பிறப்புரிமை என்று வைத்திருப்பா ளுகில் அம்மேன்மை அவனைவிட்டு நழுவிப்போய்விடுகிறது. பிறகு அம்மனிதன் தானே மேன்மைக்குத் தகுதியற்றவனு கிருன். இது வாழ்க்கையை ஒட்டிய ஒரு தத்துவம். ய்க்ஞம் என்னும் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டது இது. இன்றைக்கு நாட்டில் அந்தணர் இல்லை. அதற்குக் காரணம் தனியுரிமை படைத்தவர்கள் அந்தணர் தருமத் தைச் செய்ய மறந்தனர்; அந்தணர் தருமத்தைச் செய்ய மறுத்தார்கள். ஆதலால் அன்னவர் அந்தணர் தன்மையை இழந்தனர். நாட்டு மக்களுக்கு இது ஒரு பெரிய பாடம். எத்துறையில் மனிதன் எத்தகைய மேம்பாடு அடைந்திருக் கின்ருனே அந்த மேம்பாட்டை அவன் பொதுவுடைமை யாக்கவேண்டும். அப்படிப் பொதுவுடைமை ஆக்குதற் கேற்ப அது அவனிடத்து வளருகிறது. பொதுவுடைமை யாக்க மறுப்பதற்கு ஏற்ப அம்மேன்மையை அவன் இழக் கின்ருன். இது எக்காலத்திலும் எல்லார்க்கும் பொதுவாய் உள்ள சனுதன தர்மமாம். Sinners are teachers in disguise என்று விவேகானந்தர் பகர்ந்தார். 'பாபம் செய்கின்றவர் கள் அப்பாபத்தின் பயனை அனுபவிப்பதன் வாயிலாக அப் பாபத்தை யாரும் செய்யலாகாதென்று மறைமுகமாகப் புகட்டுகின்ற போதகாச்சாரியர்கள் ஆகிருர்கள்.' இதுவே அந்த ஆங்கில முதுமொழியின் கருத்தாகும். தகுதி வாய்ந்தவர்களுக்கு மேலான தத்துவத்தை எடுத்து வழங்கி அதைப் பொதுவுடைமையாக்கவேண்டும். அப்படிச் செய்ய மேன்மக்கள் என்பார் மறுத்தது ஒரு பாபச் செயலாம். அந்தப் பாபச் செயலைச் செய்தால் என்ன விளைவுவரும் என்பதை அன்னவர்கள் இன்று நிரூபித்து வருகிருர்கள். சமுதாயம் இனி அப்பாபத்தில் ஈடுபடலாகாது. அதைத்

திருத்தியமைப்பது எங்ஙனம் என்பதைப் பரமஹம்சதேவர் தமது ஜீவிதத்தின் வாயிலாக விளக்கியிருக்கிறார்.

பரமஹம்சர் புகட்டிய போதனையை நாம் இப்பொழுது பின்பற்றுகிறோம். ஆயிரக்கணக்கான வருஷங்களாக நம்முடைய தேசீயப் பிரார்த்தனையாக இருந்துவரும் காயத்ரீ மந்த்ரமானது பொதுமக்களிடத்திருந்து மறைத்து வைக்கப் பட்டிருந்தது. அதைப் பொதுவுடைமை ஆக்குவது முறை. அதைப் பொதுவுடைமை ஆக்குதற்கு ஏற்ப நாடு செய்த குற்றத்துக்குப் பரிகாரம் தேடுகிறோம். காயத்ரீ மந்த்ரத்தின் தத்துவத்தை இப்பொழுது விளக்குகின்றோம். யாருக்கு அத்தத்துவம் விளங்குகிறதோ அவர்கள் அதைக் கையாளத் தகுதி வாய்ந்தவர்கள். காயத்ரீயைக் கையாளுதற்கு ஏற்ப பாரமார்த்திக மேன்மை வாய்க்கிறது. காயத்ரீ வருமாறு:

**ओं भूर्भुवस्सुवः**
**ओं तत् सवितुर्वरेण्यं**
**भर्गो देवस्य धीमहि ।**
**धियो यो नः प्रचोदयात् ॥**

ஓம் பூர்புவஸ்ஸுவ:
ஓம் தத் ஸவிதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி ।
தியோ யோ ந: ப்ரசோதயாத் ॥

यः ய: யார் नः ந: நம்முடைய धियः திய: அறிவை प्रचोदयात् ப்ரசோதயாத் தூண்டுகிறாரோ तत् தத் அந்த देवस्य தேவஸ்ய சுடருடைய सवितुः ஸவிது: கடவுளின் वरेण्यं வரேண்யம் மேலான भर्गः பர்க: ஒளியை धीमहिः தீமஹி: தியானிப்போமாக.

யார் நம் அறிவைத் தூண்டுகிருரோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.

*இது பிரம்ம காயத்ரீ அல்லது சூரிய காயத்ரீ. இதுவே நம் தேசீயப் பிரார்த்தனை. இதுவே நம் தேசீய மந்த்ரம். பல்லாயிரம் ஆண்டுகளாகக் காஷ்மீரத்திலிருந்து கன்னியா குமரிவரையில் இது கையாளப்பட்டுவந்துள்ளது. ஓம் அல்லது ஓங்காரம் ஓசைகள் அனைத்துக்கும் முதல் காரணம். இது நாதப் பிரம்மம் என்று இயம்பப் பெறுகிறது. பரவஸ்து ஓசை வடிவத்தில் இலங்குகிறது. அகிலாண்டத்தின் இயக்கம் ஓசையை உண்டுபண்ணுகிறது. அந்த ஓசையே ஓங்காரம். ஓங்கார ஓசை இயற்கை முழுதிலும் ஓவாது ஒலித்துக்கொண்டிருக்கிறது. 'ஓவாத சத்தத்து ஒலியே போற்றி' என்று இது போற்றப்படுகிறது. ஓம் என்பது பீஜ மந்த்ரம். இதன் திரிவுகளாக ஏனைய மந்த்ரங்கள் வந்துள்ளன. ஓங்காரத்தை உச்சரிப்பதற்கு ஏற்ப மனிதன் மேன்மையுறுகிறுன். இயற்கை முழுதுக்கும் பொதுவாக அண்டமெங்கும் ஒலித்துக்கொண்டிருக்கின்ற இம்மந்த்ரத்தை யாரோ சிலர்தான் உச்சரிக்கவேண்டும் என்னும் கட்டுப்பாடு எதற்காக? சுவாசிக்கும் காற்று எல்லார்க்கும் பொதுவாக இருப்பது போன்று இந்த ஓசையும் பொது.*

*ஓங்காரத்தை உச்சரித்த பிறகே ஏனைய மந்த்ரங்களை உச்சரிப்பது ஐதிகம். ஏனென்றுல் மந்த்ரங்கள் அனைத்துக்கும் மூல மந்த்ரமாக அல்லது பீஜமந்த்ரமாக இருப்பது ஓங்காரம். இதற்கு ஸ்தூல விளக்கம் தருவோம். கணபதி பூஜை பண்ணிய பிறகே ஏனைய தெய்வங்கள் போற்றப்படுகின்றன. கணபதி ஓங்கார மூர்த்தி. கணபதி வழிபாடு எல்லார்க்கும் சொந்தம். அதினின்றே அவருக்குரிய ஓசை*

அல்லது மந்த்ரம் எல்லார்க்கும் பொது என்பது வெளியாகிறது.

பூ: புவ: ஸுவ: ஆகிய மூன்று சொற்கள் பூலோகம், புவர்லோகம், ஸ்வர்க்கம் எனப் பொருள்படுகின்றன. இம் மூவுலகங்கள் அகத்திலும் இருக்கின்றன, புறத்திலும் இருக்கின்றன. பண்பாடு அடையாதவர்களுக்கு அம் மூவுலகும் புறத்தில் உள என்னும் கொள்கை ஏற்புடையதாகிறது. அகத்திலேயே அம் மூன்றும் அமைந்துள்ளன என்னும் கொள்கை சிறிது பரிபாகம் அடைந்தவர்களுக்கே விளங்குகிறது. நம்மிடத்து இம்மூவுலகங்களும் எப்படி அமைந்திருக்கின்றனவென்று பார்ப்போம். ஜாக்ரதாவஸ்தை, சொப்பனவஸ்தை, சுஷுப்தி அவஸ்தை ஆகிய மூன்று அவஸ்தைகளும் நம்மிடத்து மாறிமாறி அமைகின்றன. மக்கள் மட்டும் அல்லர்; பறவைகளும் விலங்குகளும் இந்த மூன்று நிலைகளை அனுபவிக்கின்றன. நனவு அல்லது விழித்திருந்து புறவுலகோடு இணக்கம் வைப்பது ஜாக்ரதாவஸ்தை. நனவு நிலையில் உடல், உள்ளம் ஆகிய இரண்டும் வேலை செய்கின்றன. கனவு என்பது சொப்பனவஸ்தை. கனவு நிலையில் புறவுலகோடு தொடர்வு வைப்பதில்லை. ஸ்தூல சரீரத்துக்கும் அங்கு வேலையில்லை. அகக்கரணமாகிய மனதே கற்பனையில் ஸ்தூல சரீரத்தையும், புறவுலகத்தையும் அதிலுள்ள உயிர்வகைகளையும் கற்பனை பண்ணிக்கொண்டுவியவகாரம் பண்ணுகிறது. அந்நிலையில் இருக்கின்றபொழுது அது யாண்டும்ஜாக்ரதாவஸ்தைக்கு நிகராகத் தோன்றுகிறது.கனவற்ற உறக்கம் சுஷுப்தி அவஸ்தை எனப்படுகிறது. அந்த அவஸ்தையில் அகவுலகம் இல்லை; புறவுலகம் இல்லை. மனதும் செயலற்றுக் கிடக்கிறது. பிரக்ஞை மட்டும் தமோகுணத்தில் மூடப்பட்டிருப்பது போன்று தன்மயமாய் எஞ்சியிருக்

கிறது. இந்த மூன்று அவஸ்தைகளிலும் நாம் மாறி மாறி இருக்கின்றோம். இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் இந்த மூன்று உலகங்களிலும் சற்று ஏறத்தாழ வசித்து வருகிறோம். இந்த மூன்று அவஸ்தைகளே பூலோகம், புவர் லோகம், ஸ்வர்க்கலோகம் என்று இயம்பப் பெறுகின்றன. நாம் எந்த அவஸ்தையில் இருந்தாலும் சரி, அதாவது எந்த லோகத்தில் இருந்தாலும் சரி, இந்தக் காயத்ரீ மந்த்ரத்தினுடைய கருத்தையுணர்ந்து அதைப் பயன்படுத்திக்கொண்டு வருகிற அளவு ஆத்மீகத்துறையில் முன்னேற்றமடைகிறோம். விழித்திருக்கின்றபொழுது நாம் சுவாசிக்கின்றோம்; கனவு காண்கின்றபொழுதும் சுவாசிக்கின்றோம்; கனவற்ற உறக்கத்திலும் சுவாசிக்கின்றோம். சுவாசிப்பதை நிறுத்துவதில்லை. நிறுத்தினால் ஒழிந்துபட்டுப் போவோம். நிர்விகல்ப சமாதியில் இருப்பவர்கள் மட்டும் சுவாசிக்காதும், அழிந்துபட்டுப்போகாமலும் இருக்கின்றனர். மூன்று அவஸ்தைகளிலும் நிறுத்தாது நாம் சுவாசித்துவருவதுபோன்று மூன்று அவஸ்தைகளிலும் காயத்ரீயில் அடங்கியிருக்கிற கருத்துக்கேற்ப நம்முடைய மனதைப் பெரிய நிலையில் வைப்போமானால் அதற்கேற்றவாறு ஆத்மபரிபாகம் நமக்கு வாய்க்கிறது. சுஷுப்தி அவஸ்தையில் மனது ஒடுங்குகிறது. ஆதலால் கருத்து ஒன்றும் உருவெடுப்பதில்லை. அந்த அவஸ்தையில் கருத்தை மேல்நிலையில் வைப்பது எங்ஙனம் என்னும் கேள்வி எழலாம். சுஷுப்தி அவஸ்தையில் தமோகுணம் ஆதிக்கம் செய்கிறது. தமோகுணத்தில் மூன்று நிலைகள் உண்டு. தமஸில் தமஸ், தமஸில் ரஜஸ், தமஸில் சத்துவம் என அம்மூன்று நிலைகள் விளக்கப் பெறுகின்றன. ஆத்ம பரிபாகம் அடைந்தவர்கள் தமஸில் சத்துவத்துக்கு மேலோங்கமுடியும். அது அறிதுயில் அல்லது யோகநித்திரை எனப்படுகிறது. அந்நிலையை எட்டுகிறவர்கள் காயத்ரீ

தத்துவத்தைக் கையாண்டவர்கள் ஆகின்றனர். அந்நிலையை எட்டுவது நம் குறிக்கோள்.

இனி, ஜாக்ரதாவஸ்தையிலேயே பூலோகம், புவர் லோகம், ஸ்வர்க்கலோகம் ஆகிய மூன்று உலகங்களையும் நமக்கு நாம் அமைத்துக்கொள்ள முடியும். உடல் வாழ்க்கையை ஒழுங்காக நடாத்துவது பூலோக வாழ்க்கையாகிறது. உள்ளத்தை மேலான எண்ணங்களில் செலுத்துவது புவர்லோகமாகிறது. எண்ணத்தைக் கடவுள்பால் செலுத்துவது ஸ்வர்க்கலோகமாகிறது. அதிகாலையில் எழுந்திருந்து இரவு படுக்கப்போகும் வரையில் வாழ்வாங்கு வாழ்கிற மனிதன் மூவுலகிலும் முறையாக வாழ்ந்தவன் ஆகின்றான்.

இந்த மூன்று லோகங்களிலும் அல்லது மூன்று அவஸ்தைகளிலும் பாரமார்த்திகப் பெருநிலையிலேயே இருந்து பழகுபவன் இரண்டாவது பிறப்பெடுத்தவன் ஆகின்றான். அதற்கு மாறாகப் புலால் உடல் உணர்விலேயே இருந்து புலால் உடலைப் பராமரிப்பதற்காகப் பாடுபடுகிறவன் புலையன் ஆகிறான். ஆக, ஒரு மனிதன், இரு பிறப்பாளன் ஆவதும் அல்லது ஒரே உடல் பிறவி எடுத்து அதில் கீழ்மையில் உழல்வதும் அந்தந்த ஜீவனுடைய மனபரிபாகத்தை ஒட்டியதாம். இரு பிறப்பாளன் அல்லது துவிஜன் யாண்டும் போற்றுதலுக்குரியவன் ஆகின்றான்.

செய்யுள் மயமாக அமைந்துள்ள காயத்ரீயில் உள்ள பதங்களை இப்பொழுது உரைநடைக்குரிய பதங்களாகப் பிரித்து அமைப்போம்.

ओं तत् सवितुः वरेण्यं
भर्गः देवस्य धीमहि
धियः यः नः प्रचोदयात्

यः ய: *யார்* नः धियः ந: தியः *நம்முடைய அறிவை* प्रचोदयात् *ப்ரசோதயாத் தூண்டுகிறுரோ* तत् *தத் அந்த* देवस्य सवितुः *தேவஸ்ய ஸவிது: சுடருடைய கடவுளின்* वरेण्यं भर्गः *வரேண்யம் பர்க: போற்றுதற்குரிய ஒளியை* धीमहि *தீமஹி தியானிப்போமாக.*

**ओं तत् सवितुः वरेण्यं**
**भर्गः देवस्य धीमहि**
**धियः यः नः प्रचोदयात्**

ஓம் தத் ஸவிது: வரேண்யம்
பர்க: தேவஸ்ய தீமஹி
தியः யः நः ப்ரசோதயாத்

**யார் நம் அறிவைத் தூண்டுகிறுரோ அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.**

*சரியாக அமைந்துள்ள காயத்ரீ மந்த்ரத்தில் பரவஸ்து வின் சொருபத்தை விளக்குதற்கான பதங்கள் மூன்று அமைந்திருக்கும். ஜீவப் பிரயத்தனத்தையும் தெய்வத் தின் அருளையும் விளக்குதற்கென்று அமைந்துள்ள வினைச் சொற்கள் மூன்று இருக்கும். இப்பேரியல்புகள் காயத்ரீ மந்த்ரங்கள் அனைத்துக்குமே பொதுவானவைகள். இந்தச் சூரிய காயத்ரீயில் பரவஸ்துவுக்கு விளக்கமாக அமைந் துள்ள மூன்று சொற்களை எடுத்துக்கொள்வோம்.* ஸவிது: **(सवितुः)** என்னும் சொல் ஸவித்ரு **(सवितृ)** என்னும் சொல் லின் ஆரும் வேற்றுமையாகும். ஸவித்ரு என்பது முதல் வேற்றுமை. ஸவிது: என்பது ஆரும் வேற்றுமை. ஸவித்ரு என்னும் சொல் உயிர்தருகிற, உற்சாகம் ஊட்டுகிற, வாழ் வைச் செப்பனிடுகிற பொருள் என்று சொல்லப்படுகிறது. உலக நடைமுறையில் சூரியன் இச்சொல்லுக்கு இலக்கா

கிறது. பரதத்துவத்தில் பரமாத்மனுக்குப் பொருந்தியதாக இப்பதம் அமைகிறது. ஸவித்ரு என்னும் சொல்லைப் பெண் பால் ஆக்குகின்றபொழுது அது ஸாவித்ரீ (सावित्री) என்று சொல்லப்படுகிறது. காயத்ரீ, ஸாவித்ரீ ஆகிய இரண்டு பெயர்களும் சக்தி தெய்வத்துக்கு உரியவைகள் ஆகின்றன. இந்த இரண்டு பெயர்களுள் ஒன்றிற்குப் பதிலாக மற்றொன்றை மொழியுமிடத்து அது இழுக்கு ஆகாது. வழிபடுகின்றவர்களுடைய வசதிக்காக ஒரு தெய்வம் ஆண்பாலாகவோ பெண்பாலாகவோ கருதப்படுகிறது. சிவ என்பது ஆண்பால்; சிவா என்பது பெண்பால். ஸவித்ரு என்பது ஆண்பால்; ஸாவித்ரீ என்பது பெண்பால். ஆணாகவோ, பெண்ணாகவோ, அலியாகவோ எப்படி வைத்துக்கொண்டாலும் அது உயிர்க்கு உயிராய் இருக்கின்ற பரவஸ்து ஆகிறது. பிரபஞ்சத்துக்கும், ஜீவகோடிகளுக்கும் ஆதாரமாகவும், மூலப்பொருளாகவும், முதல் காரணமாகவும் இருப்பது பரவஸ்து. பரவஸ்துவுக்குப் புறம்பாக ஜீவர்களுடைய ஜீவ வியக்தியில்லை. ஜகத்துக்குத் தோற்றம் என்பது இல்லை. கடலில் தோன்றி கடலின்மீது அலைகள் உருண்டோடி விளையாடுவது போன்று ஜகத்தும் ஜீவனும் பரத்தில் தோன்றி பரத்தில் நிலைபெற்றிருக்கின்றன. ஆக, ஜகத்துக்கும் ஜீவனுக்கும் தூண்டுதல் அளிக்கும் பாங்கில் இருக்கிற பரவஸ்து ஸவித்ரு என்று சொல்லப்படுகிறது. கட்புலனாகின்ற சூரியன் இச்செயலைப் பிரபஞ்ச நிலையில் செய்து வருவதால் சூரிய நாராயணனும் ஸவித்ரு என்று சொல்லப்படுகிறார். ஆனால் இதன் லக்ஷியார்த்தம் பரமாத்மனையே குறிக்கிறது.

பரம்பொருளை விளக்குதற்கென்று அமைந்துள்ள இரண்டாவது சொல் தேவ: (देवः) என்பதாகும். தேவஸ்ய (देवस्य) என்பது இதன் ஆறாம் வேற்றுமை. தேவ: என்

னும் சொல் திவ்யமானவன், பிரகாசமானவன், மேலாம் நிலையில் இருப்பவன் என்றெல்லாம் பொருள்படுகிறது. பிரகாசத்தோடு கூடியிருப்பது மூலநிலை, யதார்த்தநிலை. பிரகாசத்தை இழந்தநிலை கீழ்மைக்கு வந்துள்ள நிலையாகும். ஜகத்தில் ஜடமாய் இருப்பதெல்லாம் மூலநிலையை விட்டு வழுவிக் கீழ்நிலைக்கு வந்தவைகளாம். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சூரியன் சுயப்பிரகாசம் வாய்ந்தவன். சூரியனிடமிருந்து சிதறி வந்துள்ள பூமியும் சந்திரனும் சுயப்பிரகாசத்தை இழந்தவைகள். இந்த இரண்டு கோளங்களையும் எடுத்து மீண்டும் சூரியனுள் போட்டால் முன்னிருந்தபடி இவைகளுக்குச் சுயப்பிரகாசம் வந்துவிடும். ஜகத் ஒரே ஜடமயமாக இருக்கிறது. ஜீவர்களோ ஜடம், சேதனம் ஆகிய இரண்டும் கலந்தவைகளாக இருக்கின்றன. பின்பு பரமனே தனது சுயப்பிரகாசத்தை இழந்துவிடாது யாண்டும் பூரணமாகவே இருப்பவன். **தேவ:** என்னும் சொல் இப்பேருண்மையை விளக்குகிறது. யாப்புக்காகவென்று அமைந்துள்ள **தேவ:** என்னும் பதத்தை லக்ஷியார்த்தத்தில் வைத்துச் சொல்லுமிடத்து **மகாதேவ:** என்பதாகும். பரவஸ்து யாண்டும் சுயஞ்ஜோதி என்பது இதன் பொருள்.

இனி, பரவஸ்துவைக் குறிக்கின்ற மூன்றுவது பதம் **பர்க:** (**भर्गः**) என்பதாகிறது. **பர்க:** என்பது ருத்ரனுக்கு அமைந்த மற்றொரு பெயர். அது சிவனுக்கு அமைந்துள்ள மற்றொரு பெயர். ருத்ரனைக் கருதுமிடத்து அழுகையின் வாயிலாக அழுக்கைப் போக்கக்கூடியவன் என்று பொருள் படுகிறது. சிவனைக் கருதுமிடத்து ஞானப்பிரகாசத்தின் வாயிலாக அக்ஞான இருளைப் போக்குபவன் என்று பொருள்படுகிறது. பரவஸ்துவின் சொரூபத்தை ஜீவர்கள்

கிரகித்துக் கொள்ளுதற்கே இந்த அடைமொழி வந்துள்ளது. ஸ்தூல உலகில் உள்ள சூரியன் தான் இருக்குமிடத்தைத் தானே விளக்குகின்றான். தன் வெளிச்சத்தைக் கொண்டு ஏனைய பொருள்களையும் விளக்குகின்றான். அங்ஙனம் ஞான சொரூபியாகிய பரமன் தன்னைத்தானே விளக்குகின்றான். அவனுடைய சன்னிதானத்தின் விசேஷத்தால் ஜகத்தும் ஜீவர்களும் ஞானக்காட்சிக்கு இலக்காகின்றன.

இங்ஙனம் ஸவித்ரு, தேவ:, பர்க: ஆகிய மூன்று சொற்களையும் நாம் உச்சரிக்கின்றபொழுது அச்சொற்களுக்கு இலக்காக இருக்கின்ற பரமனையே பாவனைபண்ணவேண்டும். 'சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவர் செல்வர் சிவபுரத்து' என்பது ஆப்த வாக்கியம். பரமனைப்பற்றிய பதங்களைப் பேசுகின்றபொழுது அப்பதங்களின் அடிப்படைக் கருத்து உள்ளத்தில் உதயமாக வேண்டும். அப்பொழுது தான் உச்சரிக்கின்ற மந்த்ரத்துக்கு வலிவு வருகிறது.

காயத்ரீக்கு இன்றியமையாத மூன்று வினைச்சொற்களை இனி ஆராய்வோம். **வரேண்யம் (वरेण्यं)** என்பது வர்ணித்தல் என்னும் வினையின் விகாரமாம். **வரேண்யம்** என்னும் சொல் போற்றுதற்குரியது என்றும், வர்ணிப்பதற்குரியது என்றும், விளக்குதற்குரியது என்றும் பொருள்படுகிறது. தங்கம், வெள்ளி முதலிய தாதுக்களை விளக்க விளக்க அவைகள் சுடர்விடுகின்றன. பரமனை விளக்குதற்கு ஏற்ப ஜீவாத்மனிடம் ஞானச்சுடர் வளருகிறது. பரமனை விளக்குதலே ஆராதனையாகிறது. பரமனைப்பற்றிய விளக்கத்தைப் பொருள்சேர் புகழ் என்று பொய்யாமொழிப் புலவர் போற்றுகிறார். நரஸ்துதி பொருள்சேராத புகழ். பரமனைப் பற்றிய ஸ்துதி பொருள் சேர்ந்த புகழ். ஆயிரம் ஆயிரமாகச் சொற்களை வாரிக்கொட்டிப் புகழ்ந்து கொண்டு

போனாலும் அவனுடைய புகழுக்கு முடிவில்லை. பரமனை இடையறாது புகழ்ந்து கொண்டிருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டை வரேண்யம் என்னும் பதம் விளக்குகிறது.

செயல் அல்லது சாதனம் வகையாக வடிவெடுக்கின்ற அடுத்த வினைச்சொல் தீமஹி (धीमहि). தியானிப்போமாக என்பது இதன் பொருள். ஆத்மசாதனங்களுள் இது தலை சிறந்தது. அஷ்டாங்கயோகத்தில் ஏழாவது அங்கமாக இருப்பது தியானம். இது முதிர்ந்தால் சமாதியாகப் பூர்த்தியாகிறது. காயத்ரீ மந்த்ரத்தைப் பயன்படுத்துகிற பொழுது சிறிது நேரம் தியானம் பண்ணுவது அவசியமாகிறது. தியானத்துக்காக நிமிர்ந்து உட்காரவேண்டும். சிரசு, கழுத்து, நெஞ்சு ஆகியவை நேராக இருக்க வேண்டும். உள்ளத்தைச் சுடர்விட்டு ஒளிர்ந்துகொண்டிருக்கின்ற தாமரை மலராகக் கருதவேண்டும். அதில் சுயஞ்ஜோதி சொரூபமாக வழிபடு தெய்வம் வீற்றிருப்பதாக உணர்தல் வேண்டும். இந்த உணர்வில் நிலைத்திருப்பது தியானமாகிறது. இங்ஙனம் ஐந்து நிமிஷத்துக்குக் குறையாமல் அரைமணி நேரம் வரையில் தியானத்தில் அமர்ந்திருக்க வேண்டும். தியானம் நமது தேசீயப் பண்பு. பல்லாயிரம் ஆண்டுகளாகப் பரதகண்டத்துப் பெருமக்கள் காலையிலும் மாலையிலும் சந்தியா நேரங்களில் ஆழ்ந்து தியானத்திலிருந்து பழகி வந்திருக்கிறார்கள். இந்தப் பண்பில் ஊறி இருப்பதற்கு ஏற்ப ஆத்மீகம் மக்களிடத்து ஓங்குகிறது.

ஈண்டு இயம்பியுள்ள இரண்டு நல்வினைகளுள் ஒன்று நாவால் போற்றுவது; மற்றது மனதால் எண்ணுவது. ஜீவாத்மன் செய்கின்ற செயல்களுள் இவையிரண்டும் பாரமார்த்திகப் பண்பாட்டுக்கு உரியவைகள். ஆத்ம சாதகன்

இவ்விரண்டையும் ஊக்கத்தோடு அனுஷ்டிக்கக் கடமைப் பட்டிருக்கிறான்.

ப்ரசோதயாத் (प्रचोदयात्) என்னும் வினைச்சொல் மூன்றாவதாக வந்தமைகிறது. தூண்டுகிற என்பது இதன் பொருள். இச்செயல் ஜீவாத்மனுடையதன்று. உள்ளத்தி னுள்ளே வீற்றிருக்கின்ற பரமாத்மனுடைய செயல் ஆகின் றது இது. ஜீவாத்மனுடைய செயலுக்குத் துவக்கமும் முடி வும் உண்டு. ஆனால் பரமாத்மனுடைய செயலுக்கோ ஆதி அந்தமில்லை. இச்செயலைத்தான் ஆன்றோர்கள் அருள் என்று அழைக்கின்றனர். அருளின் பாங்கு சர்வகாலமும் உள்ளத்தி னுள்ளே நிலைபெற்றிருக்கிறது. ஆத்ம போதத்தில் விழிப் படைந்து வருகிறவர்களுக்கு அது விளங்குகிறது. அருளின் பாங்கை உள்ளத்தினுள்ளே உணர்பவனைத்தான் இருபிறப் பாளன் என்று சொல்லவேண்டும். வெறும் உபநயனச் சடங் கால் இந்த உணர்வு உருவெடுக்காது. பரிபாகத்தின் விளை வாகவே இது உருவெடுக்கிறது.

இந்தக் காயத்ரீ மந்த்ரத்தில் இறைவனுடைய அருளும் ஜீவப்பிரயத்தனமும் இடம் பெற்றிருக்கின்றன. இவ்விரண் டையும் ஒன்றுபடுத்துவதுதான் யோகம். ஆக, பாரமார்த்தி கப் பெருவாழ்வுக்குத் தகுதியுடையவர்களே காயத்ரீ மந்த் ரத்தைச் சரியாகப் பயன்படுத்த வல்லவர்கள் ஆகின்றார்கள்.

காயத்ரீ மந்த்ரத்தில் மெய்யெழுத்தை நீக்கிவிட்டு உயி ரெழுத்தும் உயிர்மெய் எழுத்தும் சேர்ந்து இருபத்திநான்கு அக்ஷரங்கள் இருக்கும். இவை மூன்று வரிகளாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொரு வரியிலும் எட்டு எழுத்துக்கள் அமையப் பெற்றிருக்கும். இதுவே காயத்ரீ அமைப்பின் முறைமை யாகும். இம்முறைமை வேதங்களில் முக்கிய இடம் பெறு கிறது.

வேதங்களின் உட்கருத்துக்களெல்லாம் காயத்ரீயில் அடங்கியிருக்கின்றன என்பது ஐதிகம். காயத்ரீயில் அடங்கியிருக்கிற கருத்து யாது என்று ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பரம்பொருளுக்கும் ஜீவாத்மனுக்கும் இடையில் உள்ள இணக்கத்தை அது ஞாபகமூட்டுகிறது. ஜீவாத்மனைப் பரமாத்மன் மயமாகப் பண்படுத்துதற்கு அது வழிகாட்டித் தருகிறது. ஆக ஜீவாத்மன் பரிணமித்து மேலோங்கி வந்து பரமாத்மனைச் சேர்வது குறிக்கோள். இது வேதங்களின் திட்டம். மானுட வாழ்க்கையின் முடிந்த நோக்கம் இதுவேயாம். இந்த நோக்கத்தைச் சுருக்கமாகக் காயத்ரீ மந்த்ரம் தெளிவுபடுத்துகிறது. ஆதலால்தான் காயத்ரீ மந்த்ரத்தை வேதங்களின் சாரம் என்று சான்றோர் சாட்டியிருக்கின்றனர்.

காயத்ரீயும், ஸாவித்ரியும் ஒன்றே என்பதை ஏற்கனவே ஆராய்ந்தோம், இனி, இதே மந்த்ரத்தைச் சரஸ்வதி என்றும் இயம்பலாம். சரஸ்வதி வழிபாடு கல்வி கற்கின்ற அனைவர்க்கும் பொதுவானது. யாண்டும் வெண்மையே வடிவெடுத்தவள் கலைமகள். வெண்மை தூய்மையின் சின்னம். சத்துவகுணம் ஓங்குமிடத்து வெண்மை நிறம் வாய்க்கிறது. சத்துவகுணத்தில் பண்பாடு அடைந்தவர்களே கலைகள் கற்கத் தகுதி வாய்ந்தவர்கள் என்பது தேற்றம். சரஸ்வதி வழிபாட்டில் சொல் சுத்தம் முதன்மை பெறுகிறது. சொல் சுத்தத்தைச் சிக்ஷா என்று அழைப்பது ஐதிகம். நாவினின்று ஏதோ ஓசையைக் கிளப்பினால் போதாது. ஓசையானது தெளிந்த சொல்லாகத் திருந்தியமைய வேண்டும். அக்ஷரங்களையெல்லாம் முறையாக உச்சரிக்க வேண்டும். அதற்கு நாப்பழக்கம் முற்றிலும் அவசியம். நாப்பழக்கத்துக்கு நல்ல கருவியாக அமைந்திருப்பது காயத்ரீ. அதன் அர்த்தம்

விளங்காத இடத்தும் மந்த்ரத்தை முறையாக ஓதுகின்ற வனுக்கு நா திருந்தியமைகிறது. சொல் சுத்தம் தானே வந்தமைகிறது. எந்தப் பதத்தையும் சரியாக உச்சரிக்கும் பண்பு வாய்க்கிறது. திரும்பத் திரும்ப ஓதிவருகிற காயத்ரீ மந்த்ரத்தைக் கொஞ்சம் பொருள் தெரிந்து ஓதினால் அது ஜபமாகிறது. ஆத்ம சாதனங்களுள் மிகச் சுலபமான சாதனம் நாம ஜபம். பரம்பொருளுக்கு அமைந்துள்ள நாமங் களுள் சிவ, நாராயண, ராம போன்ற நாமங்கள் ஜபத்துக் குரியவைகள். இருபத்து நான்கு அக்ஷரங்களை உடைய காயத்ரீ மந்த்ரமும் ஜபத்துக்குரியது. இந்த மந்த்ரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகச் சாதகன் ஜபிக்கின் றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் ஆத்ம பரிபாகம் அடை கின்றான். 'யக்ஞங்களுள் நான் ஜப யக்ஞம்' என்று கிருஷ்ண பரமாத்மா தமது மகிமையை விளக்குகிறார். ஏனைய யக்ஞங்கள் கஷ்டமானவைகள். அவைகளுக்கேற்ற சூழ்நிலை யும் உபகரணங்களும் அமையவேண்டும். ஆனால் ஜப யக்ஞமோ அத்தகையதன்று. எந்த வேளையில் வேண்டு மென்றாலும் நாமஜபம் பண்ணலாம். எந்தச் சூழ்நிலையில் வேண்டுமானாலும் நாமஜபம் பண்ணலாம். பலப்பல அலுவல் களுக்கிடையிலும் நாமஜபம் பண்ணலாம். நடமாடும் பொழு தும், பயணம் போய்க்கொண்டிருக்கும் பொழுதும் நாமஜபம் பண்ணலாம். ஜபம் பண்ணுவதற்குக் காயத்ரீ மந்த்ரம் மிகச் சிறந்ததாகிறது.

காயத்ரீ மந்த்ரத்தைத் தியானிப்பதற்கு ஏற்ப, ஜபிப்ப தற்கு ஏற்ப அந்தக்கரணம் சுத்தியடைகிறது. சித்த சுத்தி அல்லது அந்தக்கரண சுத்தி மானுட வாழ்க்கையின் மேலாம் குறிக்கோள் ஆகிறது. நல்ல மனம் படைத்திருப்ப வன் நன்மகனாகின்றான். நல்ல மனம் படைத்திருப்பவனுக்கு

இகலோக வாழ்வு இனிது நிறைவேறுகிறது. நல்ல மனம் படைத்திருப்பவன் ஆத்மீகத்துறையில் விரைந்து மேல்நோக்கிச் செல்லுகிறான். முற்றிலும் மனபரிபாகம் அடைந்தவன் மிக எளிதில் பரம்பொருளுக்கு உரியவனாகிறான்.

பிரார்த்தனை என்பது மேலாம் வேண்டுதலின் வாயிலாக ஜீவாத்மா, பரமாத்மாவோடு இணக்கம் கொள்ளுதலாம். ஜீவாத்ம பரமாத்ம இணக்கத்தை நிலை நாட்டுதற்குப் பிரார்த்தனையானது சிறந்ததொரு கருவியாகிறது. பிரார்த்தனை வெறும் உரைநடையில் இருக்கலாம்; செய்யுள் வடிவத்தில் அமைந்திருக்கலாம். எப்படி அமைந்திருந்தாலும் உள்ளத்தில் உணர்ச்சி ஓங்கியிருக்குமாகில் அது பிரார்த்தனையாகிறது. உணர்ச்சியற்ற பாடலோ, உரைநடையோ பிரார்த்தனையாகாது. அது பொருளற்ற ஓசை. உணர்ச்சியை உருவாக்குவதற்குக் காயத்ரீ மந்த்ரம் பெருந்துணைபுரிகிறது. ஆதலால், காயத்ரீ மந்த்ரத்தைப் பொருளோடு கூட்டி உணர்ந்து உச்சரித்தால் அது நல்ல பிரார்த்தனையாகிறது.

கிரியையோடு கூடிய வழிபாடுகளைச் செய்வதும் ஆத்ம சாதனமாகிறது. அத்தகைய வழிபாட்டில் ஈடுபடுகிற ஒருவன் சிறிது நேரம் காயத்ரீ மந்த்ரம் ஜபித்துவிட்டு வழிபாட்டில் இறங்குவானாகில் அவ்வழிபாடு பக்தி மிக நிறைந்ததாக அமையும். சடங்குகள் தம் அளவில் பொருளற்றவைகள். செக்குமாடு சுற்றிச் சுற்றி வருவது போன்று சில பூஜா சடங்குகளை மனிதன் காலமெல்லாம் கையாண்டு வருகிறான். ஆனால் சுற்றிவருகிற செக்குமாடு இருந்த இடத்திலேயே இருப்பது போன்று உணர்ச்சியற்ற கிரியைகளில் ஈடுபடுகிறவன் ஆத்மீகத்துறையில் சிறிதேனும் முன்னேற்றம் அடைவதில்லை. காயத்ரீ ஜபத்தின் வாயிலாக உள்ளத்

தில் உணர்ச்சியை ஓங்குவித்த பின் கிரியா விசேஷங்களில் பிரவேசிக்கின்றவன் இனிது முன்னேற்றம் அடைகிறான்.

நேர் தியானத்தில் அமர்கின்ற ஆத்ம சாதகர்கள் காயத்ரீ மந்த்ரத்தை ஒரு தடவை மனத்தினுள் சிந்தனை செய்து அக்கருத்துமயமாக அமர்கிறார்கள். அது ஆழ்ந்த தியானமாகிறது. நேரம் போவது கருத்தில் படுவதில்லை. ஆதலால் தியான மந்த்ரங்களுள் சிறந்தது காயத்ரீ மந்த்ரமாம்.

காயத்ரீ மந்த்ரத்தில் மற்றொரு சிறப்பு இருக்கிறது. ஒரு மனிதன் தனக்காகவென்று தனியாகச் செய்கின்ற சாதனமன்று காயத்ரீ. 'நம்முடைய அறிவை எப்பொருள் தூண்டுகிறதோ' என்று அது பன்மையில் துவங்குகிறது. 'அப்பெரிய பொருளைத் தியானிப்போமாக' என்று பன்மையில் முடிகிறது. ஆத்மசாதகன் தனித்திருந்து சாதனங்கள் பயிலுகின்ற இடத்தும் எண்ணத்தால் தன்னை மற்றவுயிர்களோடு இணைத்துக்கொள்ளவேண்டும். தான் வேறு, மற்றவுயிர்கள் வேறு என்று பிரிவுபடுத்துவது அறியாமை. உயிர்கள் அனைத்தையும் ஒன்றுபடுத்தி இறைவனுடைய விராட் சொரூபமாக உணர்தல் வேண்டும். தனியாகத் தனக்கென்று வாழ்பவன் சிறுமையுறுகின்றான்; அனைத்தையும் தன்மயமாகக் கருதுகின்றவன் மேன்மையுறுகின்றான். கருதுவதுமட்டும் போதாது. அது செயலாக வடிவெடுக்கவேண்டும். காயத்ரீ மந்த்ரத்துக்குத் தகுதிவாய்ந்தவர்களையெல்லாம் தெரிந்தெடுத்து அவர்களை அத்துறையில் தூண்டுவது நல்ல சாதனமாகிறது. பரநல சேவைக்கு எல்லை கட்ட முடியாது. பரநல சேவையில் ஜீவபோதத்தை முற்றிலும் ஒப்படைக்கிறவன் பரத்துக்குரியவன் ஆகிறான். 'மானுடா, நீ அலாதியாக உனக்காகவென்று வாழ்பவன் அல்லன்.

உலகு அனைத்துக்குமே உன்னை உரியவனுக்கு' என்னும் கோட்பாட்டைப் பன்மையில் அமைந்துள்ள காயத்ரீ மந்த்ரம் ஞாபகம் ஊட்டுகிறது. ஆதலால்தான் இத்தனை ஆயிரம் ஆண்டுகள் இந்தியாவுக்குரிய தேசீயமந்த்ரமாக இருந்த காயத்ரீயை உலகுக்குரிய விச்வமந்த்ரமாக விரிவுபடுத்த வேண்டும். காயத்ரீ என்னும் சொல்லில் காய+த்ரீ என்னும் இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. காய என்றால் கானத்துக்குரியது எனப்பொருள்படுகிறது. கானம் பண்ணுதல் அல்லது இன்னிசையோடு இணைப்பது சிறந்த செயலாம். மேலாம் கருத்து ஒன்றை உரைநடையில் சொல்லலாம் அல்லது அதை இசையோடு இணைத்து வெளியிடலாம். இசையோடு இணைப்பதற்கேற்ப இனிமை அதிகரிக்கிறது. உள்ளத்தைத் தொடும்படி உணர்ச்சியை வளர்க்கிறது. காயத்ரீ மந்த்ரமானது கானசொரூபமாக இருந்து உயிர்களையெல்லாம் உயர்நிலைக்கு எடுக்கவல்லதாம். கண்ணனுடைய குழலோசை உயிர்களையெல்லாம் ஒன்றுபடுத்தி அவைகளை உயர்நிலைக்கு எடுத்தது. காயத்ரீ கானத்துக்கும் அத்திறமை உண்டு. பலரை ஒன்று கூட்டி வைத்துக் கொண்டு கானமயமாக அதைக் கையாளுதல் நல்ல சாதனமாகிறது. இனி த்ரீ-த்ராயதே என விரிவுபடுகிறது. பயத்தினின்று காப்பாற்றுகிறது என்பது இச்சொல்லின் விளக்கமாம். பயப்படும் பாங்குடையவர்களாக ஜீவர்கள் இருக்கிறார்கள். ஜனன மரணத்தைப்பற்றிய பயம், வாழ்விலே வந்து வாய்க்கும் இன்னல்களைப்பற்றிய பயம் இப்படிப் பயந்து வாழுகின்ற ஜீவர்கள் பரம்பொருளை அணுகுகின்ற பொழுது அபயம் அல்லது அஞ்சாமையைப் பெறுகின்றனர். அபயகரம் படைத்திருப்பது தெய்வத்திடத்திருக்கும் சிறப்பாகிறது. அபயகரத்தோடு அம்பிகை, ஹரி, ஹரன் ஆகிய

வர்கள் மிளிர்கின்றனர். காயத்ரீ தேவியும் அபய சொரூபிணி. காயத்ரீயைச் சார்ந்திருப்பவர்கள் அபயத்தில் நிலைபெற்றவர் ஆகின்றனர். வாழ்க்கைப் பிரச்சனைகளையெல்லாம் விலக்கிவைக்க வல்லவள் காயத்ரீ தேவி.

இம்மந்திரத்தில் நः தியः ப்ரசோதயாத் - நம்முடைய அறிவைத் தூண்டுகின்ற என்பது முதற்கருத்து. தூண்டப் பெறுவதால் நம்முடைய அறிவு வளர்ந்து வருகிறது. 'சுடர் விளக்காயினும் தூண்டுகோல் ஒன்று தேவை' என்பது பழமொழி. நாம் ஒவ்வொருவரும் உண்மையில் ஆத்மசொரூபம்; அறிவைத் தூண்டித் தருவது வாழ்க்கையின் குறிக்கோள். தூண்டுதற்கு ஏற்ப அறிவு மேலும் மேலும் வளர்கிறது.

புறத்திலுள்ள சூழ்நிலை அறிவைத் தூண்டுதற்கு ஏதுவாகிறது. தூண்டுதல் உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டு நிலைகளிலும் நிகழ்கிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். கிழவனார் ஒருவர் தள்ளாடி நடந்து வருகிறார். சிரமப்பட்டு நடக்கிற அவர் பின்புறம் ஏதோ சப்தம் கேட்டார். திரும்பிப் பார்த்தார். நாகசர்ப்பம் ஒன்று வருவதைப் பார்த்தார். உடனே ஓட்டம் பிடித்து நெடுந் தூரம் சென்று நின்றார். ஓடினால்தான் உயிர் தப்பிப்போம் என்னும் அறிவு அவருக்கு உதயமாயிற்று. அங்ஙனம் அவர் அறிவைத் தூண்டியது புறத்திலிருந்த சூழ்நிலையாகிய நாக சர்ப்பமாம். பயமூட்டுதல் என்னும் பாங்கில் அக்கிழவருக்கு அறிவூட்டப்பட்டது. இனி, அதே கிழவருக்கு உடன்பாட்டு முறையிலும் அறிவுத் தூண்டப் பெறுவதாகும். கோயில் ஒன்றுக்குத் தரிசனத்துக்குப் போய்க்கொண்டிருந்தார். ஆராதனைக்காக மணியடிக்கும் ஓசை அவர் காதில்பட்டது. விரைந்து செல்லாவிட்டால் கோயிலை மூடிவிடுவார்கள் என்னும் சூழ்நிலை அவருடைய அறிவைத் தூண்டியது. ஆதலால்

அவர் விரைந்து நடந்தார். எல்லாவுயிர்களுக்கும் இங்ஙனம் இரண்டுவிதமான தூண்டுதல்கள் புறவுலகிலிருந்து வந்து கொண்டிருக்கின்றன. அத்தூண்டுதல்களால் ஏவப்பெற்று நாம் அறிவை வளர்த்து வருகிறோம்.

வேதத்தின் சாரம் காயத்ரீ மந்த்ரம் என்று கூறப்படுகிறது. இயற்கையின் நடைமுறையையும் அந்நடைமுறையினின்று உயிர்களுக்கு வருகிற நலனையும் வேதம் விளக்குகிறது. காயத்ரீ மந்த்ரமும் அதே செயலைச் செய்கிறது. அச்சீரிய செயல் புறவுலகமாகிய பிரபஞ்சத்தில் நிகழ்கிறது; அகவுலகமாகிய அந்தந்த ஜீவனுடைய அந்தராத்மாவிலும் அதே செயல் நிகழ்கிறது. அண்டத்தில் இருப்பது பிண்டத்திலும் இருக்கிறது என்பது கோட்பாடு. அண்டத்தில் இருப்பது அணுவிலும் இருக்கிறது என்பதும் கோட்பாடு. அண்டம், அணு ஆகிய இரண்டு பொருள்களுக்கு இடைநிலையில் இருப்பது பிண்டம் அல்லது மானுட அமைப்பு. அகிலாண்டத்தோடு சீர்தூக்கினால் மானுட பிண்டம் எவ்வளவு சிறியதும் நுண்ணியதும் ஆகின்றதோ, அவ்வளவு சிறியதாகவும் நுண்ணியதாகவும் ஆகிறது மானுட பிண்டத்தோடு சீர்தூக்கப்படுகிற அணு. மானுடராகிய நாம் அகிலாண்டத்தின் அமைப்பையும், அகிலாண்டத்தின் நிகழ்ச்சியையும் முற்றிலும் அறிந்துகொள்ள முடியாது. அதேவிதத்தில் ஓர் அணுவின் அமைப்பையும், அதன் நிகழ்ச்சியையும் அறிந்து கொள்ள முடியாது. ஆனால் மானுட பிண்டத்தையும் அதன் செயலையும் அறிய நமக்கு இயலும். இதைச் சரியாக அறிந்துகொண்டால் அண்டத்தையும் அணுவையும் அறிந்தவர் ஆகிறோம். ஏனென்றால் பெரியதிற் பெரியதாய் இருக்கிற அகிலாண்டத்திலும், இடை நிலையில் இருக்கிற பிண்டத்திலும், அணுவுக்கு அணுவாய் இருக்கிற பரமாணுவிலும்

அமைப்பு ஒரேவிதமானது. நிகழ்கிற நிகழ்ச்சியும் ஒரே விதமானது.

காயத்ரீ மந்த்ரத்தின் துணைகொண்டு புறவுலகத்திலுள்ள பெருமைகளையும், செயல்களையும் மக்கள் எல்லாரும் அறிந்துகொள்ளக்கூடும். அதே பெருமைகளும் செயல்களும் அகவுலகு ஆகிய மானுட சொரூபத்தில் அமைந்துள்ளன. புறவுலகின் துணைகொண்டு புறவுலக மகிமைகளையும் செயல்களையும் அறிகிறவன் சாதாரண மனிதன். அதே மகிமைகளையும் செயல்களையும் அகவுலகு ஆகிய தன் சொரூபத்தில் அறிய வல்லவன் துவிஜன் அல்லது இருபிறப்பாளன். இனி, துவிஜன் மூன்று படித்தரங்களில் வைத்துப் பாகுபடுத்தப்படுகிறான். தலைத்தரத்தில் இருப்பவன் துவிஜோத்தமன். அவனை அந்தணன் என்றும், பிராமணன் என்றும் அழைப்பது மரபு. இடைநிலையில் இருப்பவன் துவிஜமத்திமன். அன்னவனை க்ஷத்திரியன் என உலகம் பாகுபடுத்துகிறது. கடைநிலையில் இருப்பவன் துவிஜ அதமன். அவன் வைசியன் எனப்படுகிறான். காயத்ரீ மந்த்ரத்தின் அத்தியாத்ம தத்துவத்தை அறிந்துகொள்ள இயலாதவனைச் சூத்திரன் என்று உலகம் இயம்பி வருகிறது.

இனி, வஸ்துவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்ற மூன்று பெயர்களிலும் புறவுலக விளக்கம், அகவுலக விளக்கம் ஆகிய இரண்டையும் சீர்தூக்கி ஆராய்வோம். ஸவித்ரு (सवितृ) என்னும் சொல்லுக்குத் தூண்டுதல் தருபவன் என்கிற பொருள் உண்டு. உலக நடைமுறைகளுக்குத் தூண்டுதல் தந்துகொண்டிருப்பது சூரிய தேவதை. என்னென்ன விதங்களில் சூரியதேவதை தூண்டுதல் தந்துகொண்டிருக்கிறது என்பதை ஆராய்ந்து பார்க்குமளவு அந்த அரிய செயல் நமக்கு நன்கு விளங்கும். மானுட சொரூபத்

தில் ஆத்ம சைதன்யம் சாட்சியாக அமைந்திருக்கிறது. அது செயல் ஒன்றும் புரிவதில்லை. தானே செயலற்றது எனினும் மானுட வாழ்க்கையில் நிகழ்கின்ற செயல்கள் அனைத்துக்கும் தூண்டுதல் தருவது ஆத்ம சான்னித்தியமாம். ஆத்மாவின் அந்த மஹிமையை அறியவல்லவன் துவிஜன் அல்லது இருபிறப்பாளன் ஆகிறான்.

ஸவித்ரு என்னும் சொல்லுக்குத் தூக்கத்தினின்று தட்டியெழுப்புபவன் என்னும் பொருள் உண்டு. சூரியன் உதயமாகின்ற வேளையில் ஸ்தாவர ஜங்கமங்களாக இருக்கின்ற உயிர்கள் அனைத்தும் உறக்கத்தினின்று விழித்தெழுந்திருப்பவைகள் ஆகின்றன. புலர்கின்ற பொழுதானது உயிர்கள் அனைத்துக்கும் பள்ளியெழுச்சியைப் பண்ணிவைக்கிறது. நாள்தோறும் கண்கூடாக நாம் காணும் காட்சி இதுவேயாம். இதற்கு நிகரான அத்யாத்ம அமைப்பு இருக்கிறது. ஆத்ம சொரூபத்தை மனிதன் எப்பொழுதெல்லாம் ஞாபகப் படுத்திக்கொள்ளுகின்றானோ அப்பொழுதெல்லாம் ஆத்ம போதத்தில் அவன் தட்டியெழுப்பப்படுபவனாகிறான். ஆத்மபோதம் அல்லது சொரூப உணர்ச்சி ஒருவனிடம் ஓங்குதற்கு ஏற்ப சொரூப ஞானத்தில் அவன் எழுப்பப்பட்டவனாகிறான். சொரூப ஞான வளர்ச்சி அடைந்து வருபவன் இருபிறப்பாளன்.

ஸவித்ரு என்னும் சொல்லுக்கு உயிரூட்டுபவன் என்னும் பொருள் உண்டு. சூரிய வெளிச்சம் படாத உயிர்வகைகளெல்லாம் தத்தம் உயிர்த் தத்துவத்தில் கீழ்மையுறுகின்றன; செயலற்றுச் சவங்கள் போன்று கிடக்கின்றன. கதிரவனுடைய கதிர்களை ஏற்பதற்கு ஒப்ப அவைகளுக்குப் புத்துயிர் வருகிறது. இந்த அதிசயத்தையும் புறவுலகில் நாம் சர்வ காலமும் கண்டு வருகின்றோம். ஜீவ அமைப்பில் எந்த

ஜீவன் தன்னை உடல் சொரூபமாக உணர்கின்றானோ அவன் பிரகிருதி நிலையிலேயே உழல்கின்றான். எந்த ஜீவனிடத்து ஆத்மபோதம் உதயமாகிறதோ அந்த ஜீவன் பாரமார்த்திகப் பெருநிலையில் வாழ்வைப் புதுப்பிக்கின்ற துவிஜன் ஆகிறான்.

காட்சிக்கு எட்டாது மறைந்த நிலையில் இருக்கும் கதிரவனுக்கு ஸவித்ரு என்று பெயர். உதயமாகிக் காட்சிக்கு எட்டுகிற நிலையில் இருக்கிற கதிரவனுக்குச் சூரியன் என்று பெயர். ஆதலால் வானத்தில் இலங்கும் அந்த ஒரே தேவதைக்கு ஸவித்ரு என்கிற பெயரும் வழங்கப்பெறுகிறது. கட்புலனாகாத நிலையில் அத்தேவதை ஸவித்ருவாகவும், கட்புலனாகின்ற நிலையில் சூரியனாகவும் அழைக்கப்பெறுகிறது. இது நடைமுறை. இதற்கொப்ப ஜீவாத்ம சொரூபத்தில் ஆத்ம சான்னித்தியம் அறியப்படாத நிலையில் அந்த ஜீவன் பசு என்றும், பிரகிருதி என்றும் இயம்பப்பெறுகின்றது. தான் ஆத்ம சொரூபம் என்னும் பிரக்ஞை ஓங்கப்பெற்றுள்ள ஜீவாத்மன் புருஷன் என்று அழைக்கப்படுகிறான்.

ஸவித்ரு என்னும் சொல் அகிலத்துக்கும் ஆதரவு என்று பொருள்படுகிறது. அசைந்து கொண்டும், மாறுபட்டுக் கொண்டும் இருக்கிற பொருள்களுக்கு அசையாதும், மாறுபடாதும் இருக்கிற பொருள் ஆதரவு ஆகிறது. ஆக, எது ஆதரவோ அது அசைவதில்லை. புறவுலகில் தென்படுகிற சூரியன் உண்மையில் ஒரே இடத்தில் இருந்தபடியே இருக்கிறது. அது வானத்தில் சஞ்சரிப்பது போன்று நமக்குத் தோன்றுகிறது. சஞ்சரிக்காத வஸ்துவைச் சஞ்சரிக்கும் வஸ்து என்று பொருள்படுத்துவது நம்முடைய சிற்றறிவு. சூரியனைச் சார்ந்துள்ள கிரகங்களுக்கெல்லாம் அது ஆதரவாக இருக்கிறது. புறவுலகில் காண்கின்ற இக்கோட்பாடு அகவுலகிலும் அமைந்திருக்கிறது. பிரகிருதி சொரூபமாக

இருக்கின்ற சரீரம், புறக்கரணங்கள், அகக்கரணங்கள் ஆகிய அனைத்துக்கும் ஆதரவாய் இருப்பது ஆத்ம சைதன்யம். இந்த ஆத்ம சைதன்யத்தை ஆதரவாக வைத்துக் கொண்டே ஜீவவியக்தி பலப்பல பாங்குகளில் வடிவெடுத்து வருகிறது என்பதை அறிபவனே துவிஜன். தன்னை வெறும் உடலாகக் கருதி அந்த உடலின் கூறுகளிலேயே உழல்பவன் சூத்திரன். புலால் உடம்பைத் தான் என்று கருதுபவன் புலையன். புலையன் என்கிற பெயரும், சூத்திரன் என்கிற பெயரும் இனத்தைக் குறிப்பனவாகா. பண்பாட்டின் கீழ் நிலையைக் குறிக்கும் சொற்களாக அவைகள் வந்துள்ளன.

ஸவித்ரு என்னும் சொல் பாபத்தினின்று விடுவிப்பவன் எனப் பொருள்படுகிறது. பாபமானது வினையின் ஒரு கூறு ஆகிறது. புண்ணியம் என்பது வினையின் மற்றொரு கூறு. கர்மத்தைப் புண்ணிய கர்மம் என்றும் பாபகர்மம் என்றும் பாகுபடுத்துகிறோம். ஜீவாத்மனை உயர்நிலைக்கு எடுப்பது புண்ணியகர்மம். ஜீவாத்மனை மேலும் மேலும் கீழ்மையில் ஆழ்த்துவது பாபம். பொழுது படிந்ததும் உயிர்கள் உறங்கப்போகின்றன. சிற்றியல்பு படைத்தவர்கள் கொலை, களவு முதலிய பாபச் செயல்களில் ஈடுபடுகின்றனர். சூரிய வெளிச்சத்தில் அத்தகைய செயல்களுக்கு அவகாசமில்லை. சூரியனுடைய சான்னித்தியம் எல்லாவுயிர்களையும் மேலான கர்மங்களில் தூண்டுகிறது. ஆதலால் சூரியன் உயிர்களைப் பாபத்தினின்று விடுவிப்பவன் எனப் போற்றப்படுகிறான். மக்களுள் தங்களை உடல் சொரூபமாக உணர்பவர்களே புல்லிய வினைகளி ஈடுபடுகின்றனர். தங்களை ஆத்ம சொரூபமாக உணர்கின்றவர்கள் சத்கர்மங்களைப் புரிந்து கர்ம அதீதத்திற்குப் போக முயலுகின்றனர். சத்கர்மங்களிலேயே ஈடுபடுகின்றவர்களும், கர்ம அதீதத்திற்குப் போக முயலுகின்றவர்களும் துவிஜர்களாவர்.

இங்ஙனம் சூரிய காயத்ரீயில் அமைந்துள்ள நாமங்களுள் ஸவித்ரு என்னும் நாமம் புறவுலகிலுள்ள சூரியனுடைய மகிமையையும் அகவுலகிலுள்ள ஆத்ம சொரூபத்தின் மகிமையையும் விளக்குவதாக வந்துள்ளது.

பர்க: **भर्गः** என்பது பரவஸ்துவைக் குறிக்கின்ற இரண்டாவது பெயர் ஆகிறது. பர்க: என்னும் பதம் திரண்ட சுயப்பிரகாசம் வாய்க்கப்பெற்றது என்பதாம். புறவுலகில் அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருப்பது சூரியன். அதனுடைய சிறப்பை நமக்கு ஞாபகம் ஊட்டுதற்கு நந்தா விளக்கை வைத்துக்கொள்ளுகிறோம். நந்துதல் என்றால் முடிவுறுதல் எனப்பொருள்படுகிறது. எது நந்தாது இருக்கிறதோ அதற்கு முடிவில்லை. சந்திரனுடைய வெளிச்சம் அமாவாசையன்று முடிவுறுகிறது. சூரியப் பிரகாசம் அத்தகையதன்று. அது ஓயாது பிரகாசித்துக்கொண்டே இருக்கிறது. சூரியனுக்கு உதயமும் இல்லை, அஸ்தமனமும் இல்லை. திரண்ட பேரொளியாய் அது யாண்டும் தன்மயமாய் இருக்கிறது. அதன் சந்நிதான விசேஷத்தால் உலகுக்குப் பெருநலன் உண்டாகிறது. துணிவகைகளைச் சில சூழ்நிலையில் வைத்திருந்தால் அவைகளில் நச்சுப் பூச்சிகள் விருத்தியடைகின்றன. அவைகளால் மனிதனுக்குக் கேடுண்டு. அத்துணிகளை வெய்யிலில் காயப்போட்டால் நச்சுப் பூச்சிகள் அழிந்துபட்டுப்போகின்றன. ஆதலால் பர்க: என்னும் பதத்துக்குத் தீங்கைப் போக்கவல்லது என்னும் பொருள் வருகிறது. உயிர்வகைகள் ஜலம் மலம் கழிந்து பூமியை அசுத்தப்படுத்துகின்றன. அப்பூமியில் ஏராளமாகச் சூரிய வெளிச்சம் படிந்தால் அந்த அசுசிகள் அகற்றப்படுகின்றன. ஆதலால் பர்க: என்னும் பதத்துக்கு நிர்மலமாக்கும் திறமை வாய்ந்தது என்னும் பொருள் வருகிறது. சூரிய

வெளிச்சம் மனிதனுடைய மேனியின்மீது படிதற்கு ஏற்பப் புதிய பிராண சக்தி மனிதனுக்கு வருகிறது. பச்சிலைகளும் அங்ஙனம் சூரியப் பிரகாசத்திலிருந்து பிராண சக்தியைப் பெறுகின்றன. உஷ்ணப் பிரதேசத்தில் வெய்யிலிலே மேனியின் மீது உடையொன்றும் போட்டுக்கொள்ளாது உழைக்கின்றவனுக்குப் பசியைத் தாங்கும் திறமை மிகவுண்டாகிறது. குளிர்ப் பிரதேசத்தில் சதா உடலை உடைபோட்டு மூடிவைத்திருக்கிறவர்கள் பசியைத் தாங்கும் வல்லமை படைத்தவர்கள் அல்லர். இங்ஙனம் சூரியப்பிரகாசம் பலப் பல பாங்குகளில் உலகுக்கு உயிரூட்டுகிறது.

பர்க: என்னும் பதம் ருத்திரனைக் குறிக்கிறது. அழச் செய்பவன் என்பது ருத்திரன் என்னும் பதத்துக்குப் பொருளாம். அழுகையின் மூலம் ருத்திரன் உயிர்களைப் பண்படுத்துகிறான். தாங்கமுடியாத வெய்யிலில் மக்கள் வியர்த்துக் கொட்டிப்பதைபதைக்கின்றனர். அதன் வாயிலாக உடலின் உள்ளிருக்கும் அழுக்குகளெல்லாம் அப்புறப்படுத்தப்படுகின்றன.

அத்யாத்மிக அமைப்பில் மனிதனுடைய அந்தராத்மா ருத்ரசொரூபமாக இருக்கிறது. சில சூழ்நிலைகளை உண்டு பண்ணி அந்தராத்மாவானது மனிதனைக் கதறிப்பதறி அழச் செய்கிறது. அத்தகைய அழுகையின் மூலம் மனிதன் ஆத்ம பரிபாகம் அடைகிறான். உள்ளிருக்கும் அந்தராத்மா புறத்திலிருக்கும் சூரியன் போன்று யாண்டும் சுயஞ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அந்த ஆத்மப் பிரகாசத்துக்கு உதயமில்லை, அஸ்தமனமில்லை, மறைத்தலில்லை, புதியதாகக் காட்சிக்குக்கொண்டுவருதல் என்பதும் இல்லை. நந்தா விளக்காக சர்வகாலமும் அது ஜொலித்துக்கொண்டிருக்கிறது. புறத்தில் தென்படுகின்ற சூரியனுக்கு ஒப்ப

அகத்தில் ஆத்ம ஜோதியைப் பாவனை பண்ண வல்லவன் துவிஜன் ஆகிறான். அந்த ஆத்ம ஜோதியை அனுபூதியில் அறிய வல்லவன் நிறைஞானியாகிறான். இங்ஙனம் அகத்தி லிருக்கும் ஆத்மப் பிரகாசத்துக்கு ஒப்பப் புறத்தில் சூரிய னுடைய பேரொளி பிரகாசித்துக்கொண்டிருப்பது தத்துவத் துக்கு முற்றிலும் பொருத்தமான விளக்கமாகிறது.

சூரிய காயத்ரீயில் பரவஸ்துவுக்குப் பொருத்தமான மூன்றாவது பதமாக அமைந்திருப்பது தேவ: (देव:) என்பது. காயத்ரீயில் அது தேவஸ்ய என்று ஆறாம் வேற்றுமையை எடுத்துக்கொள்ளுகிறது. தேவ: என்னும் பதத்துக்கு திவ்வியமானது என்பது பொருள். திவ்வியமானது என்று சொல்லுவதும், தெய்வீகம் வாய்க்கப்பெற்றது என்று சொல்லுவதும் ஒன்றேயாம். உதயமாகாத சூரியன் நம் முடைய காட்சிக்கு நாள்தோறும் உதயமாவது போன்று தென்படுகிறது. உதயமாகின்றபொழுது ஆனாலும் சரி, உச்சநிலையில் இருக்கின்றபொழுதானாலும் சரி, அஸ்தமன மாகின்றபொழுதானாலும் சரி அதனிடத்து யாண்டும் தெய் விகம் திகழ்ந்துகொண்டேயிருக்கிறது. சூரிய காயத்ரீ ஜபம் பண்ணுகிறவன் புறத்தில் தென்படுகிற சூரியனை ஊனக் கண்கொண்டு பக்தி பூர்வமாகப் பார்க்கிறான். பிறகு மனக் கண்கொண்டு அதற்கொப்ப திவ்வியமாயுள்ள அந்தராத் மாவைப் பாவனை பண்ண வல்லவனே துவிஜன் அல்லது இரு பிறப்பாளன் ஆகின்றான். புறத்தில் தென்படுகின்ற சூரிய னிடத்துள்ள தெய்விகப் பாங்குகளனைத்தும் அகத்தில் ஒளிர்ந்துகொண்டிருக்கின்ற ஆத்மாவினிடத்து உள்ளது. புறத்திலிருப்பதைக் காண எல்லார்க்கும் இயலுகிறது. காண்பவர்களுள் சூரியனுடைய மகிமையை மனதில் வாங்க வல்லவர்கள் மிகச்சிலரே. மனதில் வாங்கிக்கொண்டவர்

களுள் அகத்திலுள்ள ஆத்மப் பிரகாசத்தை அதனோடு ஒப்பிட வல்லவர்களே நல்ல ஆத்ம சாதகர்கள் ஆகின்றனர்.

இங்ஙனம் அகத்திலுள்ள பாரமார்த்திகப் பெருநிலைக்குப் பொருத்தமான புறச்சான்றாக அமைந்திருப்பது வானத்தில் சஞ்சரிக்கும் சூரியதேவதையாம். அந்த தேவதைக்கும் உள்ளிருக்கும் ஆத்ம தத்துவத்துக்கும் விளக்கமாக வாய்த்திருப்பது சூரியகாயத்ரீ. கண்டுள்ள ஒன்றை உபமானமாக வைத்துக்கொண்டே இனிக் காணப்போகும் ஒன்றை அணுகுதல் வேண்டும். இப்படிச் செய்வது முற்றிலும் பொருத்தமான கல்வி முறையும் ஆகின்றது. சூரிய காயத்ரீயைக் கையாண்டு புறத்திலிருப்பதை எடுத்துக்காட்டாக வைத்து, அகத்திலிருப்பதை அணுகுதற்கு ஆன்றோர்கள் வழிவகுத்து வைத்திருக்கின்றனர். இம்முறையே வேத விதியென்று விளக்கப்பெறுகிறது.

காயத்ரீ மந்த்ரத்தில் அடங்கியுள்ள மூன்று வினைச் சொற்களுள் **வரேண்யம் वरेण्यं** என்பது ஒன்று. வினையின் விளைவே வரேண்யம் என்னும் பெயருரிச் சொல்லாக வடிவெடுத்திருக்கிறது. விரும்புதல், மாண்பைப் போற்றுதல், சிறப்பை விளக்குதல் ஆகிய செயல்களின் விளைவு வரேண்யம் ஆகிறது. புறவுலகில் புலப்படுகிற பொருள்களுள் எல்லாராலும் போற்றுவதற்கு உரியதாய் இருப்பது சூரியன். தன்னளவில் சூரியன் போற்றுதற்குரிய பெருமைகளை யெல்லாம் படைத்திருக்கிறது. வாழ்க்கைக்குப் பயன்படுபவைகளுள் முதன்மை வகிப்பது சூரியன். பயன்படுவதை ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு உள்ளத்தைக் கவரவல்லதைக் கணக்கில் எடுத்துக்கொள்ளுமிடத்து இரும்பைக் காந்தம் கவர்ந்திழுப்பது போன்று காண்போருடைய கருத்தைக் கவரவல்லதாய் இருப்பது சூரியன். உதயசூரியனை வழுத்து

வது இந்தியப் பண்பு ஆகிறது. சர்வகாலமும் சூரிய வழிபாடு நம் நாட்டில் நிகழ்ந்துகொண்டிருக்கின்றது. இவ்வழிபாட்டில் நல்ல பழக்க வழக்கம், ஒழுங்குப்பாடான வாழ்வு, ஆரோக்கியம், மனத்தெளிவு ஆகிய சிறப்புக்கள் இடம் பெறுகின்றன. ஆஸ்திகன், நாஸ்திகன் என்கின்ற பாகுபாடு சூரிய நமஸ்காரத்தைப் பாதிப்பதில்லை. ஆஸ்திகர், நாஸ்திகர் ஆகிய எல்லோரும் உணவு உண்பதில் ஈடுபடுவது போன்றும், உடற்பயிற்சியில் ஈடுபடுவது போன்றும் சூரியனைப் போற்றுதலிலும் ஈடுபடுகின்றனர்.

வாயாரப் புகழுதலில் ஒரு நியமனம் உண்டு. அழிந்து பட்டுப்போகும் பொருள்களைப் புகழ்வதெல்லாம் பொருள் சேராத புகழ் ஆகிறது. அழிவற்ற பொருளாகிய பரவஸ்துவைப் புகழ்வதே பொருள் சேர்ந்த புகழ் ஆகிறது. சூரியன் பிரளய காலத்தில் ஒடுங்கிவிடுகிறது. எனினும் சூரியனைப் போற்றுதல் பரவஸ்துவைப் போற்றுதற்கு நிகர் எனக் கருதப்படுகிறது.

சூரிய காய்த்ரீயை அமைத்த தீர்க்கதரிசிகள் இப் பாராட்டுதலைப் பாரமார்த்திகத்துக்குப் பயன்படுத்துவாராயினர். புறவுலகில் போற்றிப் பாராட்டுதற்குரியதாகப் பரிதி இருப்பது போன்று அகவுலகில் பாராட்டுதற்குரியவனைப் பரமன் இருக்கின்றான். புறவுலகிலிருக்கும் பாஸ்கரன் பகல் வேளையில் நமக்குத் தோன்றுகிறான். ஆகையினால் அவன் பகலவன் எனவும் பகரப்பெறுகிறான். அகவுலகில் இருக்கிற பாஸ்கரனோ இரவுபகல் அற்றவனாக இருக்கிறான். உள்ளத்தினுள்ளிருக்கும் பரம்பொருளை நாவால் வழுத்துதற்கு ஏற்பச் சொல் சுத்தமடைகிறது. சொல்திறமை அதிகரிக்கிறது. உள்ளத்தினுள்ளிருக்கும் ஞான சூரியனைப் போற்றவல்லவர் இருபிறப்பாளர். அப்பொருளைப் போற்று

தற்கு ஏற்பப் போற்றுபவனுடைய பண்பு பன்மடங்கு அதிகரிக்கிறது. ஆதலால் காயத்ரீ மந்த்ரத்தை ஆத்ம சாதகன் காலையிலும், நண்பகலிலும், மாலையிலும் ஜபித்துவர வேண்டும். காயத்ரீ மந்த்ரத்தின் பொருள் தெரியாது ஜபித்தாலும் சொல் தெளிவுறுகிறது; சொல்லும் திறமை ஓங்குகிறது. காயத்ரீயின் பொருள் உணர்ந்து அதைச் சொல்லுங்கால் சொல்லுபவனுடைய அறிவு தீட்டப்பெறுகிறது. அறிவு நுண்ணறிவாக ஓங்குகிறது. பேச்சு மனிதனுக்கு அமைந்துள்ள சிறந்த கருவியாகிறது. பேச்சை எவ்வளவுக்கெவ்வளவு பாரமார்த்திகத்திலேயே பயன்படுத்துகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் பண்பட்ட பெருமகன் ஆகிறான். சிறந்த பக்தர்கள் நரஸ்துதி செய்யாது பரமனையே போற்றுவார்கள் என்னும் கோட்பாடு இத்தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது.

தீமஹி (धीमहि) என்பது அடுத்த வினைச்சொல். தியானிப்போமாக என்பது அதன் பொருள். பேச்சானது நாவின் செயலாய் இருப்பது போன்று தியானிப்பது உள்ளத்தின் செயலாகிறது. தியானம் பண்ணுவதை உள்குதல் என்று இயம்பலாம். விரும்புகிற உருவம் உள்ளத்தில் உருவெடுப்பதற்கு ஏற்ப அதன் செயலாகிய உள்குதலும் ஓங்குகிறது. மனம் என்னும் அந்தக்கரணம் மனிதனிடத்துச் சிறப்புற்று இருப்பதாலேயே அவனுக்கு மனிதன் என்னும் பெயர் வந்துள்ளது. சிந்தனை ஒருமுகப்படுமிடத்து அது தியானம் ஆகிறது. தியானம் உயிர்களின் இயல்பில் ஆழ்ந்து இடம் பெற்றிருக்கிறது. அதைப் புதிதாகப் பழகுதல் என்பது உண்மையன்று. வாழ்க்கையில் உயிர்கள் கொண்டுள்ள லக்ஷியத்திற்கு ஏற்ப உள்குதல் அல்லது தியானம் பண்ணுதல் நிகழ்ந்து வருகிறது. சாதா

ரண உயிர்கள் உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களைப்பற்றி எண்ணுகின்றன. பல ஜன்மங்களில் உணவைப்பற்றியும் புறவுகிலிருந்து வருகிற இன்பத்தைப் பற்றியும் தியானித்துப் பழகிய மனிதன் அகவுலகிலிருக்கும் ஆத்ம சொரூபத்தைப்பற்றி தியானம் பண்ண ஆரம்பிக்கின்ற பொழுது அவன் துவிஜன் ஆகிறான். தியானம் எவ்வளவுக் கெவ்வளவு பரமனைப் பற்றியதாகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு புறவுலகம் புறக்கணிக்கப்படுகிறது. உடலுணர்ச் சியை மறந்து ஆத்ம போதத்தில் ஊறியிருப்பது மேலாம் பிறப்பு ஆகிறது. மகிழ்ச்சியோடு மனிதன் அதில் சிந்தை யைச் செலுத்துகிறான். அவன் நாடுகிற இன்பம் புறவுலகில் இல்லை. ஆனந்தமே ஆத்மா; ஆத்மாவே ஆனந்தம். ஆதலால் ஆத்மாவில் திளைத்திருப்பவனே இருபிறப்பாளன் ஆகிறான். ஒழுங்காகத் தியானப் பயிற்சி பண்ணுவதற்குக் காயத்ரீ மந்த்ரம் நன்கு உதவுகிறது. தியானம் ஓங்குதற்கு ஏற்ப பிரபஞ்ச வாழ்வு பாரமார்த்திக வாழ்வாக மேலோங்கு கிறது. மானுட ஜன்மத்தின் மேலான பயன் பரவஸ்து தியானத்தில் ஆழ்ந்து மூழ்கியிருத்தலாம்.

ப்ரசோதயாத் (प्रचोदयात्) என்னும் மூன்றாவது வினைச் சொல் தூண்டுகிற என்று பொருள்படுகிறது. தூண்டுகிற செயல் மிக முக்கியமானது. தூண்டப்படுவதாலேயே உயிர் கள் அனைத்தும் முன்னேற்றம் அடைந்து வருகின்றன. அந் தந்த உயிரின் பரிணமத்துக்கும் பரிபாகத்துக்கும் ஏற்பத் தூண்டுதல் என்னும் செயலானது நிகழ்ந்து வருகிறது. கீழ் நிலையினின்று மேல்நிலைவரையில் சான்றுகளோடு கூடி விளக்குமிடத்து அச்செயல் நன்கு புலப்படும். பொரித்த குஞ்சு, போட்ட குட்டி, பிறந்த சிசு ஆகியவைகள் முதலில் பசியால் தூண்டப்படுகின்றன. உள்ளிருக்கிற பேரறிவுப் பொருளே அத்தூண்டுதலை உண்டுபண்ணுகிறது. குஞ்சு

வாயைப் பிளந்து இரையை எதிர்பார்க்கிறது. தாய்ப் பறவை தன் உடலில் செமித்த உணவை ஊட்டுகிறது. விலங்கின்குட்டி தாயின்மடியை நாடித் தள்ளாடிப் போகிறது. மடியை எட்டிப் பால் அருந்துகிறது. மானுட சிசு பசியால் அழுகிறது. அதற்குப் பாலூட்டப்படுகிறது. இவைகளின் வாழ்வு நிறைவேறுவதற்கு இத்தகைய தூண்டுதல் உள்ளிருந்து வருவது அவசியமாகிறது.

சற்று வளர்ந்தான பிறகு உள்ளிருந்து வருகிற தூண்டுதல் இரண்டு கூறுகளாகப் பிரிவடைகிறது. காப்பாற்றுபவர்களை நாடி அருகில் ஓடுவது ஒரு கூறு. இன்னும் குஞ்சாக இருக்கும் பறவை தன் இனத்தினிடத்து மகிழ்வோடு ஓடுகிறது. விலங்கின் குட்டியும் அதே செயலைச் செய்கிறது. மானுட சிசு அடையாளம் தெரிந்தவர்களிடம் மகிழ்வோடு போகிறது. உள்ளிருக்கும் தூண்டுதல் இங்ஙனம் உடன்பாட்டு முறையில் நிகழ்வதாகிறது. இனி, உள்ளிருக்கும் தூண்டுதல் எதிர்மறையிலும் நிகழ்கிறது. பருந்தைப் பார்த்தால் குஞ்சு தாயின்சிறகுக்குக் கீழ் பறந்தோடுகிறது. சத்துருக்களாய் இருக்கும் உயிர்களைக் கண்டால் குட்டிகள் விலகி ஓடுகின்றன. பாம்பின் அருகில் நாய்க்குட்டி போகாது. வேற்றுரிடமிருந்து மானுட சிசுக்கள் விலகிப் போகின்றன. இப்படி இரண்டுவிதத் தூண்டுதல்கள் உள்ளத்தினின்று உருவெடுத்து வருவது வாழ்க்கைக்கு முற்றிலும் அவசியமானது. ஆதரவு தருவதை அணுகுதலும், ஆபத்தை விளைவிப்பதினின்று விலகியோடுதலும் வாழ்க்கைக்கு இன்றியமையாத செயல்களாகின்றன.

உள்ளிருந்து உந்தித் தள்ளிக்கொண்டிருக்கின்ற ஆற்றல் மக்களிடத்து மேலும் பண்பட்ட நிலைக்கு வருகிறது. நலன் தருவதை நாடுதலும் கேடு தருவதினின்று விலகியிருப்பதும்

மக்களிடத்து அமைகின்ற தனிச் சிறப்பாகும். நலனையும் கேட்டையும் பாகுபடுத்துகிற திறன் சிற்றுயிர்களிடத்திருப்பதைவிட அதிகமாக மனிதனிடத்து முன்னேற்றம் அடைந்திருக்கிறது. உள்ளிருக்கும் தூண்டுதலைக்கொண்டே கேட்டைக் களையவும், நலனை நாடவும் மனிதன் செய்கிறான். அதற்காகவென்று உள்ளத்தினுள்ளே அமைந்துள்ள தூண்டுதல் தெய்விகப்பெற்றி வாய்ந்ததென்று பகரவேண்டும். 'யானேதும் அறியாது என் உள்ளத்து வந்து நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்' என்பது கோட்பாடு. இனி உள்ளிருக்கும் தூண்டுதல் பண்பாடடைந்துள்ள பெருமகனிடம் மேலும் மேலானதாக மிளிர்கிறது. உடலைப் பேணுதலும் உடல் வாழ்க்கையிலேயே கட்டுண்டுகிடப்பதும் வாழ்வின் குறிக்கோள் ஆகாது என்ற தூண்டுதலை உள்ளிருக்கும் அறிவுப் பொருள் உண்டுபண்ணுகிறது. பாரமார்த்திகப் பெருவாழ்வை நாடவேண்டுமென்றும் அது தூண்டுகிறது. ஆதரவை நாடவும், ஆபத்தை விலக்கவும் செய்த தூண்டுதல் இப்பொழுது உயர்நிலையில் உடல் வாழ்க்கையில் பற்றைக் குறைக்கவும், ஆத்மீக வாழ்க்கையில் பற்றை வளர்க்கவும் செய்கிறது. எந்த மானுடன் இந்த நிலையை எட்டுகிறானோ அவனே துவிஜன் அல்லது இரு பிறப்பாளன் ஆகிறான். உயிர்வகைகள் இயல்பாகச் சத்துருக்களிடமிருந்து விலகிப் போவதுபோன்று துவிஜன் ஒருவன் இயல்பாக உடல் பற்றினின்று விலகிச் சொரூபப் பற்றுதலை வளர்க்கிறான். இயல்பாக அவன் பிரபஞ்சப்பொருள் நாட்டத்தினின்று விலகிப் பாரமார்த்திக அருள் நாட்டத்தில் ஊக்கம் கொள்ளுகிறான். இயல்பாக அவன் இந்திரியார்த்தங்களினின்று விலகித் தன் நிஜ ஸ்வரூபத்தில் நிலைபேறு எய்துகிறான். புளியம்பிஞ்சு பழமாகும் பொழுது ஓடு வேறாகவும், பழம் வேறாகவும் பிரி

கிறது. அங்ஙனம் துவிஜன் ஒருவன் தன்னை உடலில் குடி கொண்டிருக்கும் ஆத்மாவென்று உணர்கிறான். ஆக, துவிஜன் யார்? துவிஜன் அல்லாதவன் யார்? என்று பாகுபடுத்துவது மிக எளிது. எத்தகைய மனப்பான்மை, எத்தகைய விவேகம், எத்தகைய வாழ்க்கை முறை என்பனவற்றைப் பார்த்துத் துவிஜனைத் தெரிந்துகொள்ளலாம். ஜீவகோடிகள் அனைத்தினுடைய உள்ளத்திலும் சுடர்விட்டுக் கொண்டிருக்கும் சுயஞ்ஜோதிப்பொருள் ஒரே பாங்கில் வீற்றிருக்கிறது. அந்தந்த ஜீவனுடைய பரிபாகத்துக்கு ஏற்றவாறு அறிவை அந்தச் சுடர்ப்பொருள் தூண்டுகிறது. முற்றிலும் பண்பட்டவனுடைய அறிவை அது பாரமார்த்திகப் பெருவாழ்வில் தூண்டுகிறது. ஆதலால் உள்ளிருக்கும் அப்பொருளின் தூண்டுதலை ஏற்றுப் பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்பவனே துவிஜன் ஆகின்றான். துவிஜன் ஆவது மானுட வாழ்க்கையின் குறிக்கோள்.

காயத்ரீ மந்த்ரம் பன்மையில் அமைந்திருக்கிறது. நம் அறிவை விகசிக்கச் செய்கின்ற சுடர்க்கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக எனப் பன்மையில் அது அமைந்திருக்கிறது. ஆதலால், இந்த மந்த்ரத்தை மக்கள் எல்லார்க்கும் பொதுவுடமை ஆக்குவது முறை. நல்ல சமுதாயம் கல்வியைப் பொதுவுடமை ஆக்குகிறது. அக்கல்வியை மக்கள் அவரவர் அறிவுத் திறனுக்கேற்ற பிரகாரம் வளர்க்கின்றனர். அதே விதத்தில் பாரமார்த்திகப் பெருவாழ்வை மக்களின் பொதுவுடைமை ஆக்கவேண்டும். பின்பு அவரவர் பரிபாகத்துக்கு ஏற்பப் பாரமார்த்திகப் பெருவாழ்வில் மக்கள் மேலோங்குகின்றனர். பாரமார்த்திகப் பெருவாழ்வை உறுதிப்படுத்துதற்கு அமைந்துள்ள மந்த்ரங்களுள் காயத்ரீ மந்த்ரம் தலைசிறந்தது. அதை ஓதவும், உன்னவும்,

உணரவும் எல்லோரையும் தூண்டுவது சான்றோர் செயல. அதைப் பயன்படுத்துதற்கு ஏற்பச் சமுதாயமனது சீரிய சமுதாயமாகத் திருந்தியமையும்.

காயத்ரீ மந்த்ரத்தை மற்றவர்களோடு கூடியிருந்து உரக்க உச்சரிக்கலாம். இறைவனுடைய நாம பஜனத்தை எல்லாரும் ஒன்று கூடியிருந்து உரக்க உச்சரிப்பது போன்று காயத்ரீ மந்த்ரத்தையும் உச்சரித்தல் வேண்டும். பிறகு ஒவ்வொரு ஆத்ம சாதகனும் தன்னுடைய இஷ்ட தெய்வத்தின் மந்த்ரத்தை உச்சரிப்பதற்கு முன்பு காயத்ரீ மந்த்ரத்தை ஐந்து தடவையோ அல்லது அதற்குமேல் அவகாசத்துக்கேற்றபடி அதிகம் தடவையோ உச்சரித்துவிட்டு இஷ்ட தெய்வ நாமஜபம் பண்ணவேண்டும். காலை, மாலை, நண்பகல் ஆகிய மூன்று சந்தியா வேளைகளில் இந்த வழிபாட்டில் ஈடுபடுவது உசிதம். நண்பகலில் இதில் ஈடுபட இயலாவிடின் ஒரே ஒருதடவை இந்த ஈடுபாட்டை ஞாபகத்துக்குக் கொண்டுவந்தால் போதுமானது. உடல் பயிற்சி உடலை உறுதிப்படுத்துவது போன்றும், கல்வி மனதைப் பண்படுத்துவது போன்றும் காயத்ரீ மந்த்ரம் மனிதனுடைய ஆத்ம சொரூபத்தை ஓங்குவிக்கிறது. காயத்ரீ மந்த்ரத்தை உரு ஏற்றுபவர்களுக்குத் திரு உண்டாகிறது. ஆடவர் மகளிர் என்னும் பாகுபாடின்றிப் பெரு[illegible] நாடும் பெருமக்கள் எல்லாரும் இந்தச் சிறந்த மே[illegible] ரத்தை நன்கு பயன்படுத்துவது உசிதம்.

5
10
50
50
00
00

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது

| ஆண்டு சந்தா | | தனி இதழ் |
|---|---|---|
| உள்நாடு | ரூ. 15-00 | ரூ. 1-50 |
| வெளிநாடு | ரூ. 45-00 | ரூ. 4-00 |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூற்றைம்பது டிபாசிட் செய்து விட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகையாகிய ரூபாய் நூற்றைம்பதையும் திரும்பப்பெற்றுக் கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா

தபோவனத் தொடர் 89

## சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய

## பெரிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | ரூ. | 32-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 16-ம் பதிப்பு | ... | 28-00 |
| ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் (தமிழ் வியாக்கியானம்) | ... | 26-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| மஹாபாரதம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 8-00 |
| விவேகானந்த விவரணம் | ... | 7-50 |
| இராமாயணம் | ... | 7-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 7-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... | 7-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசமஞ்ஜரீ | ... | 6-50 |
| தாயுமானசுவாமி பாடல்கள் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| தினசரி தியானம் | ... | 5-00 |
| அம்பிகையின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-50 |
| விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | .... | 3-75 |
| சிவனின் ஆயிரம் திருநாமங்கள் | ... | 4-00 |
| சுவாமி விவேகானந்தர் | ... | 3-50 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-50 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 3-00 |

விலை ரூ. 2-00